அங்காரக மகாதிசையிற் கேதுபுத்தி மாதம்-4 நாள்-27

இதற்குப் பலன்

கேது கேந்திரதிரிகோணங்களில் சுயக்ஷேத்திரனுய் சு ருடன் கூடினுல் அல்லது இலக்னுதிபதியுடன் கூடினுல் அற் சௌக்யம் அற்பலாபம் அதிகச்செலவு புக்திமுதலில் மத்திப இப்படி கொடுத்து உடனே பூமிலாபம் சுபகாரியங்கள் இரா சினேகிதம் தனலாபம் நூதனபிரபுக்கள் நேசமாம் கடைசியி கஷ்டபலன் உண்டாம்.

சஷ்டாஷ்டம விரயத்தில் ஸ்வட்சேத்ரனுய் இலக்னுதிப யுடன் கூடினுல் புத்ரகாரங்கள் விருத்தியும் ஆரோக்கியமும் ஐஸ் வரியமும் சுபபலனுமாம்.

கேது திசாநாதனுக்கு கேந்திர திரிகோணங்களில் பாப யுடன் கூடினுல் விசனம் காரியவிக்னம் மனுேபயம் இரு தாற்போலிருந்து சத்ரு உண்டாவன் சுயசனங்களால் உபத்ரவ வரும் பிராணனுக்கு பயமுண்டாம் பிரயாணமாகும் அன்னி தேசகமனமுண்டாம் போனவிடத்தில் செனக்கியபலனும்.

கேது இலாபஸ்தானத்தில் சுபயுக்தனுயிருந்தால் முதலி அற்ப சௌக்கியம் மத்தியில் விசனம் எடுத்த காரியங்க விகாதம் சகல ஜனங்களுக்கும் பொல்லாதவனுய் கடைசியி சவுக்கியபலனும்.

கேதுதிசாநாதனுக்கு 6-8-12-ல் பாபயுக்தனுனுல் கலக பல்நோய் சோரபயம் சகோதரனுக்கு அரிஷ்டமாம்.

கேது துவிதிய சப்தமத்திலிருந்தால் அரிஷ்டமுண்டா அதற்கு ஆட்டுக்கிடா தானஞ்செய்தால் பரிகாரமாம்.

அங்காரக மகாதிசையிற் சுக்கிரபுத்தி வருஷம்-1 மாதம்-2

இதற்குப் பலன்

சுக்கிரன் கேந்த்ரதிரிகோணத்தி லிருந்தால் வந்தவுடனே புண்ய தீர்த்தஸ்நானம் தேவதாதரிசனம் அன்யதேசம் போன வன் ஊரில் வந்துசேர்வன் கந்தபரிமளாதிகள் தரித்துக்கொள் கிறதும் தானதருமம்செய்வதும் தடாகமுண்டாக்குகிறதும்சேனுதி பத்யம் வரும் யாதொரு காரியமுஞ் செய்ய தீரமுண்டாம்.

திசாநர்தனுக்கு 6-8-12-ல் இருந்தால் விசனமே பெரி தாம் கிரகப்பிரவேசமும் இராசாவினுல் ஆக்கினை ரோகம் ஆயுத பீடை பயம் சோராக்கினிபயம் தனமில்லாமையுமாம்.

சுக்கிரன் துவிதியசப்தமாதிபதிகளுடன் கூடினுல் தேக சாட்யம் வரும் அதற்கு வெள்ளெருமை தானம் பண்ணினுல் தீரும்.

## அங்காரக மகாதிசையிற் சூரியபுக்தி மாதம்-4 நாள்-4

### இதற்குப் பலன்

சூரியன் கேந்திர திரிகோணங்களில் ஸ்வக்ஷேத்திரங்களில் இருந்தால் சௌக்கியமாய் இராசபிரீதி யுண்டாம் கீர்த்தி யுண்டாம் கிஞ்சிற்று திரிச்சலுண்டாம் முதலில் கஷ்டபலன் மத்தியில் சௌக்யம் அந்தியத்தில் விசனம் அன்யதேசம் போனவிடத்தில் சோரபயமுண்டாம்.

சூரியன் இலக்னுதிபதியுடன் கூடினுல் தனதான்யவிருத்தி மனது சந்தோஷம் வரும் வஸ்திரபூஷணுலங்காரமுமாம்.

சூரியன் திசாநாதனுக்கு கேந்திர திரிகோணத்திலிருந்தால் கொஞ்சம் தனலாபம் வீட்டில் சுபகாரியமுண்டாம் விவசாயங் கூடுமாதலால் இராசதரிசனம்.

சூரியன் திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் எத்தனக் காரியங் குறைந்தாலும் பயம் ரோகம்வரும் இதற்கு காரியப்ரீதி ஸ்நானம் பண்ணினுல் தீரும்.

## அங்காரக மகாதிசையில் சந்திரபுக்தி மாதம்-7

### இதற்குப் பலன்

சந்திரன் ஸ்வக்ஷேத்ர கேந்திர திரிகோணத்தில் இலாபத்திலிருந்தால் புண்யதீர்த்தஸ்நானம் தேவதரிசனம் இராசப்ரசாதம் சௌபாக்யம் விவாகம் புத்ரசம்பத்தும் தடாகம் தருமசித்தியும் சத்கருமங்கள் செய்வான் வீட்டில் இலட்சுமிகடாட்சம் பொருந்தியிருக்கும் பின்னும் சகோதரசௌக்யம் ஐசுவரியமுண்டாம் நற்போசனம் பசுவாகனம் சம்பிரமம் பூரணசந்திரனுனல் பூரண பலன். பின்னும் வடக்கு திக்கில் பிரயாணம் போனவிடத்தில் இராசசேவதரிசனம்.

நீசத்தில் சத்துருக்ஷேத்திரத்திலிருந்தாலும் 6-8-12-லிருந்தாலும் மரணமுண்டாம் இராசபுத்தி இராசாக்களால் பயமுண்டாம் பசு தன தான்யத்திற்குக் குறைச்சல் வரும்.

சந்திரன் களத்ர ஸ்தானத்ததிபதியுடனும் பாக்யாதிபதியுடனுங் கூடினுல் அல்லது குருவுடனுங் கூடி பார்வை பெற்றிருந்தால் இராச்சியபாரமுண்டாம் சந்தனபுஷ்பாலங்கார பூஷணத்துட னிருப்பான் தடாகம் புண்யகோபுரதருமங்கள் பண்ணுவன் கியானம் தேவப்ராமணபூசை செய்வான்.

சந்திரன் திசாநாதனுக்கு கேந்திர திரிகோண லாபத்தில் நின்ருல் பிதாவுக்கு சவுக்கியம் புராணகாவியம் கேட்பன் சேனுதிபத்திய முண்டாம் யுத்தத்தில் செயம்வரும் சுயசனங்களால் சௌக்கியமுண்டாம்.

சந்திரன் திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் இராசயோகம் துக்கமுண்டாம் மனதிற்குப் பீடைபிடித்தாற்போல புத்திரர் சம்பவிக்கும்.

சந்திரன் துவிதியசப்தமாதிபதிகளுடன் கூடினுல் அ
மிருத்து தோஷமாம் அதற்கு துர்க்கைசெபம் வெள்ளைப்பு
தானஞ் செய்யவும்.

அங்காரக மகாதிசை முற்றிற்று.

## இராகுமகாதிசை வருடம்-12

### இதற்குப் பலன்

நாளுக்குநாள் புத்திகுறைச்சலா யிருக்கும் வியசனத்
ரோகத்தைக் கொடுப்பன் துக்கத்தைக் கொடுப்பன் பாபகன்
கள் செய்யப்பட்ட புத்தியைக் கொடுப்பன் வெகு நஷ்டத்தை
கொடுத்து தரித்திரத்தையும் கொடுப்பன்.

இராகு 3-6-10-11—லிருந்தாலும் அல்லது உச்சராசியிலிரு
தாலும் இராச்சியலாபம் சுற்றத்தார் சௌக்கியம் விவசாய
அர்த்தலாபம் மேலெழுதினபடி இல்லாவிட்டால் கஷ்டத்தை
கொடுப்பன் குன்மம் க்ஷயரோகம் பித்தரோகம் தரும். பொரு
ராசாக்கள் அபகரித்துக் கொள்வர். முதலில் ரோகாக்னிபய
இராசபயம் மத்தியில் அர்த்த லாபம் அந்தியத்தில் சௌக்ய
னும் பாபயுக்தனு யிருந்தால் கடைசியில் தேக பீடைவரும் அ
லது நிகளபந்தனம் ஸ்தானப்பிரஷ்டம் வரும்.

### இராகு மகாதிசையில் இராகுபுத்தி வருடம்-2 மாதம்-8 நாள்-1

### இதற்குப் பலன்

தனதான்ய நாசம் சத்ருபீடை பயம் வாதரோகம் சூலை நி
விட்டுப் போகுதலும் மனேவியாகூலமும் தாரம் புத்ராளுக்
ஆனியுமாம்.

இலக்கினுதிபதியுடன் கூடினுல் தேசதேசத்திற்கு சஞ்சா
செய்வன் கடகத்தில் ரிஷபத்தில் கன்னியிலிருந்தால் வருடத்
லாவது அந்தியத்திலாவது இராசபிரீதியும் கீர்த்தியும் தேசா
திர ஐசுவரியங்களும் வஸ்திராபரண சௌக்கியம் சேனுதிபத்ய
புத்திர லாபமுண்டாம் மேற்குத் திசையிற் பிரயாணமும் போ
விடத்தில் வாகனுதி லாபமுண்டாம் சுபருடன் கூடினுல் சு
திருஷ்டி பெற்றிருந்தாலும் பிதுர் அரிட்டம்.

2-6 இலக்கினத்தில் பாபயுக்தனுனல் அதிகமும் கஷ்ட
மாதுர் பிதுர்க்களுங் கஷ்டம் புத்ரசோபம் நாற்கால் சீவநஷ்ட
அசீரணத்தா லுபத்திரவமும் சமானமான சனங்களால் விசன
மாம்.

கேந்திரகோணலாபத்தில் சுபயுக்தனு யிருந்தால் வீ
வாசல் மிராசுகள் விருத்தியுண்டாம் இலட்சுமிகடாட்சமுண்ட
துர்க்கை செபஞ்செய்தால் சௌக்கியமாம்.

இராகுதிசையிற் குருபுத்தி வருஷம்-2 மாதம்-4 நாள்-24

இதற்குப் பலன்

கேந்திரத்திரிகோண ஸ்வக்ஷேத்திரத்தில் இலாபத்தில் பின்னும் பரம உச்சனுக யிருந்தால் இராசாக்கள் பூசிதனுய் இராசயோகத்தில் சம்பந்தப்படுவான் நாளுக்கு நாள் சந்திரன் வளருகிறதுபோல் ஐசுவரிய விருத்தியாகும் வாகனயோகமும் பசுக்கள் சேரும் நிருதிமுலையிலாவது மேற்கேயாவது பிரயாணம் வரும் போனவிடத்தில் இராச தரிசனமுண்டாம் அதன் காரிய சித்தியும் மறுபடி உடனே ஊருக்கு வருவன் பிராமணபூசை யாத்திரை சத்கருமங்கள் செய்வன் இஷ்டமான போசனஞ் செய்வான்.

குரு நீசனுய் அஸ்தங்கிதனுய் சத்துரு வீட்டில் 6-8-12-ல் பாபயுக்தனுனல் நித்தியம் பாபகன்மத்தைப் பண்ணுவன் புத்ர களத்ரபீடை தனவிரயம் மார்பு நோய்காணும் ஸ்தானப் பிரஷ்டம் வரும்.

திசாநாதனுக்கு கேந்திரகோணங்களில் தனலாபத்தி லிருந் தால் வீடு மிராசுகள் போசன சவுக்யம் பூஷணம் தேகா ரோக்கியமாம்.

திசாநாதனுக்கு 8-12-ல் பாபயுக்தனுயிருந்தால் தனச்சேதம் இராஜகோபம் சத்ருபீடை மனஸ்தாபம் அன்யதேச பிரயாணம் அசீரணம் முற்பாதி தேகபீடை பிற்பாதி சௌக்கியம் சுபருடன் கூடினுல் சுபபலம் துவிதிய சப்தமத்திலிருந்தால் அஜீரணத் தால் சுரம் வரும் அதற்கு சொர்னதானம் செய்யவும்.

இராகு மகாதிசையிற் சனிபுத்தி வருஷம்–2 மாதம்–10 நாள்-6

இதற்குப் பலன்

சனி கேந்திரகோணத்தில் ஸ்வக்ஷேத்ர மூலத்திரி கோணத்திலும் இலக்னுதிபதியுடன் கூடினுலும் வாகனலாபம் இராசபயம் விவாகம் சுபசோபனுதிகள் புண்யகாரியம் தடாகம் சத்பிரபுக்களிஷ்டமாகிறதும் தீவுகளுடைய வஸ்துக்கள் இலாபம் தன்னுடைய பிரபு தனக்கு சவுக்யத்தை கொடுப்பான்.

சனி இலக்கினத்திற்கு 4-8-12-ல் தனத்தில் நீசத்தில் சத்துரு க்ஷேத்ரனுனல் பந்தனம் க்ஷயரோகம் தேகசுகமனம் ஆபத்தான பந்துஜன மனஸ்தாபம் மாதுர் ஜனங்களுடைய வேஷம் இராசகோபம் சகலத்திற்குங் குறைச்சலுமாம்.

சனி திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்தில் பாபயுக்த னுனல் இராசப்பீடை தாரம் புத்ரபீடை புத்தி முதலில் சுபபலன் இராசமூல்யத்தில் அர்த்தலாபம் உடனே ஸ்தானபிரஷ்டம் மனஸ்தாபம் ஆஸ்திகளெல்லாம் குறைச்சலாம்

திசாநாதனுக்கு 9-8-12-பாபயுக்தனுனல் மார்புநோய் காணும் விஷபயம் அக்கினிபயம் இராசபயம் க்ஷயரோகம் குன்ம

ரோகம் சூலைபித்தரோகம் நற்போசன மில்லாமை உத்தியோ மில்லாமையும் விசனமுமாம்.

துவிதிய சப்தமத்தில் அந்தஸ்தானுதியுடன் கூடினு சுரத்தினுல் வாதகுன்மத்தினுல் பீடிப்பன். இதற்கு எரு தானம் அல்லது சனி செபஞ்செய்தால் தீரும்.

இராகு மகாதிசையிற் புதன்புத்தி வருஷம்-2 மாதம்-9 நாள்-

இதற்குப் பலன்

புதன் ஸ்வக்ஷேத்ர கேந்திரகோண லாபத்தில் நின் வியாபார வர்த்தகதிரவியம் வித்யாலாபம் சுபசோபனுதி செய்வன் தாரம் புத்திரர்கள் இச்சையான ஸ்திரீகளுடன் நே தேகத்திற்கும் சவுர்யமுண்டாம்.

புதன் 6-8-12-ல் சனி சூரியனுடன் கூடியிருந்தால் அவர் பார்வை யிருந்தாலும் கலகம் துக்கம் தேகஜாட்யமாம்.

புதன் திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்தில் ஸ் க்ஷேத்திரத்திலிருந்தால் இஷ்டான்ன போஜனம் பூஷணு காரமும் விவசாயம் வாகனம் நாற்கால்சீவன் கிணறு கு உண்டு பண்ணுவது புண்யகருமங்கள் கிராமம் பூமி சாஸ்வத யிருக்கப்பட்ட நிலை உண்டாகிறதும் இதுகளுக்கெல்லாம் சவுக் பலனும்.

புதன் திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபயுத்தனுனல் து புத்தி சோராக்னிபயம் கலகம் சகல காரியத்திற்கும் ஹானியா

புதன் துவிதிய சப்தமாதிகளுடன் கூடினுல் அபமிருத் தோஷம் வரும் இதற்கு புதன்ஜெபம் செய்தால் பரிகாரமாம்.

இராகுமகாதிசையிற் கேதுபுத்தி வருஷம்-1 நாள்-18

இதற்குப் பலன்

கேது சுபயோகத்திலிருந்தால் சுபபலம் பாபயோகத் திருந்தால் பாபபலம் புத்திசபலம் சூத்ரசூனியம் சம்பவிக்கு தாரம் புத்ராளுக்கு ரோகம் காண்பிக்கும் நாற்கால்சீவன் நஷ் வரும் கேது வாகனுதியுடன் கூடினுல் வாகனம் வரும் சுபனுட கூடி சுபதிருஷ்டி பெற்றிருந்தால் புத்திரலாபம் சவுக்கியம் இரா யோகமுமாம்.

கேது சஷ்டாஷ்டத்திலிருந்தால் மரணம், 2-லிருந்தா விஷபீடை 3-லிருந்தால் சகோதரபீடை 1-லிருந்தால் சத்தி நாசம் 4-லிருந்தால் மாதுர்நாசம் உச்சனுனல் இராஜசம்பத் சகல சவுக்கியமுண்டாம்.

திசாநாதனுக்கு கேந்திரகோணலாபத்தில் நின்றுல் அ சௌக்கியம் சொற்பலாபமுமாம் விவசாயம் பசுவிர்த்தி அற்பமா கடைசியில் கஷ்டத்தையும் தனவிரயத்தையும் கொடுக்கும்.

கேது பாபநீசனுடன் கூடினால் சுரம் விஷரோகம் சகலத்திற்கு பீடையான பங்கமாவது அன்றியும் பிரபுவினால் கஷ்டம் வரும் விரோதமாவன் விருச்சிகத்தில் கடகத்தில் சிங்கத்திலிருந்தாலும் கலகம் பந்துஜனத்துவேஷம் அன்யதேச ப்ரவேசம் வரும்.

8-லிருந்தால் அபமிருத்துவும் மகரத்திலிருந்தால் விஷபீடை காணும் அதற்குச் சாந்தி சாவல்தானம் செய்யத் தீரும்.

## இராகு மகாதிசையில் சுக்கிரபுத்தி வருஷம்-3

### இதற்குப் பலன்

சுக்கிரன் கேந்திர கோணத்தில் இலாபத்திலிருந்தால் யோகப்ரபலமாம் பிராமணர் மூலத்தில் தனப்ராப்தியாம் சிநேகிதன் புத்ராள் சகல காரியமும் இராஜயோக பலனும்.

சுக்கிரன் உச்சனுனால் ஸ்வக்ஷேத்திரனு யிருந்தால் வாகனுதி லாபம் இராஜவிர்த்தி சௌபாக்யத்தைக் கொடுக்கும் வீடு மிராசு புத்ர மித்ர களத்ரம் மகா சௌக்யம்.

6-8-12-லிருந்தால் நீசனுய் சத்ருவுடன் கூடினுலும் சனியுடன் கூடினுலும் கலகம் யோகம் தன் பிரபுக்களினுல் கஷ்டம் வீட்டில் சர்வ ஜனங்களுக்கும் பீடையுண்டாம்.

சுக்கிரன் திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்தில் சுபருடன் கூடினுல் நூதன கிரகமுண்டாம் போஜனம் பந்து சிநேகிதன் புத்ர லாபம் வாகன சௌக்கியம் களத்ர ஸ்திரீ போகபாக்யம் இராஜப்ரசாதம் நினைத்தகாரியம் ஜெபம் மேற்குத்திக்கில் பிரயாணம் வரும் போனவிடத்தில் வெள்ளை சால்வை வெகுமானம் வரும்.

சுக்கிரன் திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபயுக்தனுனுல் துன்பம் பீடை தலைநோய் ஜ்வரம் இராஜபீடை விஷபீடை குன்மவியாதி அகாலபோஜனம் சகலத்திற்கும் வருத்தமாம் கிரகப்பிரவேசம் இராஜரால் தனச்சேதம் துவிதியசப்தமாதிகளுடன் கூடில் அபமிருத்து வரும் அதற்கு துர்க்கைசெபம் செய்யவும்.

## இராகு மகாதிசையில் சூரியபுத்தி மாதம்-10, நாள்-24

### இதற்குப் பலன்

சூரியன் ஸ்வக்ஷேத்ரகேந்திர கோணத்தில் இலாபத்திலிருந்தால் அல்லது சுபயுக்தனுய் சுபப்பார்வை பெற்றிருந்தால் இராஜரால் ஸ்திரீகளால் கீர்த்தி அற்பசௌக்கியம் அற்பகிராமம் கிராமாதிகாரம் புத்ராளுக்கு அற்பவிர்த்தி.

சூரியன் இலக்னுதிபதியுடன் பாக்யாதியுடன் குருசந்திரன் பார்வை பெற்றிருந்தால் இராஜனனுசரிப்பான் மத்தியில் நிபுணுவான் மனதில் விசனமாவது ஒருபயமாவது தோற்றப்படும்

வெள்ளைக் குடை யுண்டாம் இராஜபூஜிதனுவன் மனதிலிருக்கப் பட்ட கோரிக்கை ஈடேறும் சூரியன் உச்சனுயிருந்தால் மேலெழு தியபடி நடக்கும்.

6-8-12-ல் தனத்திலாவது பாபயுக்த துற்பலனு யிருந்தால் சுரபயம் வரும் நோய் அதிசாரரோகம் கலகம் இராஜநிஷ்டூரம் பிரயாணம் சத்ருபீடை சோராக்கினிபயம் சகல ஜனங்களுக்கும் விரோதமாம் சகோதரபீடை கிரகப்பிரவேசம் வரும்.

சூரியன் திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபருடன் கூடினுல் குடும்பரோகம் மார்புநோய் க்ஷயரோகம் இவைகளில் ஒன்று காண்பிக்கும் பந்துக்கள் கலகமாம்.

சூரியன் துவிதிய சப்தமாதிகளுடன் கூடினுல் அவமிருத்து தோஷமுண்டாம் சூரியன் செவ்வாய் பார்வை பெற்றிருந்தால் பந்துக்களில் கலகமுண்டாயிருக்கும் அதற்கு சூரியப்ரீதி பண்ணி ஞல் தீரும்.

இராகு மகாதிசையில் சந்திரபுத்தி வருஷம்-1, மாதம்-6

இதற்குப் பலன்

சந்திரன் ஸ்வக்ஷேத்ர கேந்திரகோண லாபத்தில் மித்ரு வீட்டிலாவது சுபருடன் கூடியிருந்தால் இராஜாதிபதியாவன் அல்லது இராஜ பூஜிதனுவன் வாகனுதிபூஷணம் ஆயுராரோக் யம் அஷ்ட ஐசுவரியமும் புத்ரசம்பத்துண்டாம் பூரணச் சந்திர ஞனுல் பூர்ணபலத்தைக் கொடுப்பன் இராஜப்ரீதிக்குச் சமுசய மில்லை சாதன பூமி லாபமுண்டு சந்தோஷமுண்டாம்.

பாபயுக்தனுனுல் 6-8-12-ல் பூரணச் சந்திரனுனுல்: கிராமம் பூமி ஆடு மாடு விவசாயம் தாரம் புத்ரர் இவைகளுக்கு ஹானி வரும் தெற்கு திக்கில் பிரயாணம் வரும் போனவிடத்தில் இராஜ தரிசனமாம் நினைத்தகாரியம் கைகூடும்.

சந்திரன் திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்திலிருந் தால் வீட்டில் இலட்சுமிகடாட்சம் பொருந்தி யிருக்கும் எந்தக் காரியங் கூடுதலுமாம் தேவபிராமணபூசை செய்வன் கூபம் தடாகமுண்டு பண்ணுவன் நற்போசன முண்டாம்.

சந்திரன் திசாநாதனுக்கு 6-8-12-ல் சத்ரு வீட்டிலிருந்து சத்ருவுடன் கூடினுல் காமாலை பாண்டு சோகமுண்டாம் பிசாசு பயம் சோரபயம் தனதான்யவிரயம் ஊருக்குப்போகையில் சோர பயம் அல்லது சிரங்கு ரணம் காண்பிக்கும்.

துவிதிய சப்தமாதிகளுடன் கூடினுல் அபமிருத்துவரும் அதற்கு வெள்ளாடு தானஞ்செய்தால் தீரும்.

## இராகு மகாதிசையில் அங்காரகபுத்தி வருஷம்-1 நாள்-18

### இதற்குப் பலன்

அங்காரகன் கேந்திர த்ரிகோணங்களில் ஸ்வக்ஷேத்ரலாபங்களில் சுபருடன் கூடினால் சுபபார்வை பெற்றிருந்தால் அல்லது இலக்னாதியுடன் கூடினால் சுபசோபனங்கள் களத்ர புத்ர சௌக்யங்கள் சகல காரியங்களும் ஜெயமாம்.

அங்காரகன் பாபயுக்தனாய் நீசனாய் 6-8-12-லிருந்தால் கலகத்தினால் விரயமுண்டாம் அன்னியதேசப் பிரயாணம் வரும் போன விடத்தில் ஆயுதத்தினால் தேகத்திற்குப் பீடையுண்டாம் விலங்கு வரும் சகல காரியத்திற்கும் ஆனிவரும் புத்தி முதலிலே நடக்கும் மத்தியில் கடைசியில் சௌக்யமுண்டாம் சீதளச்சுரம் அதிசாரம் சமுசயமில்லாமல் வரும்.

அங்காரகன் திசாநாதனுக்கு கேந்திர கோணத்தில் விருட்சிகத்தில் இலாபத்திலிருந்தாலும் அல்ப சௌக்யம் சொல்ப லாபம் இராஜ மூலத்தில் சுகம் கலியாணம் பூமிலாபம் ரத்ன லாபம் சிவந்த வஸ்திரம் செவலையான குதிரை பிரயாண மூலத்தில் இராஜதரிசனம் உண்டாம்.

அங்காரகன் திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் நீசத்தால் பாபருடன் கூடினால் தாரம் புத்ராளுக்கும் சகோதரர்களுக்கும் ஹானிவரும் அங்காரகன் 2-7-ல் கூடினால் ப்ரீதி எருதுதானஞ் செய்தால் தீரும்.

இராகு மகாதிசை முற்றிற்று.

---

## குருமகாதிசை வருடம்-16

### இதற்குப் பலன்

இராஜ அதிகாரம் சந்தோஷ சித்தத்தை யுடைத்தானவன் தருமார்த்த காரியங்களிலே விபலமுள்ளவன் எந்த வாகனத்தி லிச்சையோ அந்த வாகனமுண்டாம் தனதான்ய சம்பத்துகள் நிறைந்திருக்கும் புத்ரமித்ர களத்ராதிகள் சம்பத்தும் சுபசோபனாதிகளுமாம்.

இலக்கினத்திற்கு கேந்திர கோணத்தில் ஸ்வக்ஷேத்திர தன லாபத்தி லிருந்தால் இராஜ்ஜியஞ் செய்வன் கீர்த்தி பெறுவன் யானை முதலிய வாகனபூடணமுண்டாம் தேவார்ச்சனை முதலான பூசைகள் செய்வன்.

குரு சஷ்டாஷ்டம விரயத்தில் நீசனானால் துக்கத்தை யனுபவிப்பன் அன்யயோகம் வரும் சகல காரியத்திற்கும் குறைச்சல் வரும்.

துவிதிய சப்தமாதிகளுடன் கூடினால் மானபங்கம் பயம் புத்ரமித்ர சகோதரர்களுக்கெல்லாம் ஹானிவரும் ஸ்தானப்

பிரஷ்டம் இராஜத் துவேஷம் வரும் சோராக்கினிபயம் முதலில் கொடுத்து மத்தியில் கடைசியில் சௌக்கிய பலனுண்டாம்.

குருமகா திசையிற் குருபுத்தி வருஷம்-2 மாதம்-1 நாள்-18

இதற்குப் பலன்

குரு ஸ்வக்ஷேத்திர கோணத்திலிருந்தால் இராஜ்யலாபம் சுபம் ஐசுவரிய முண்டாம்.

குரு காமாதிகளுடன் கூடினல் பிராமண பிரபுக்களினல் ஒ தயவு தன்னுடைய பிரபுக்களினல் கூடுதலை யுண்டாம்.

குரு நீசத்தில் சஷ்டாஷ்டம விரயத்திலிருந்தால் முதலில் ராஜபயமுண்டாம் சத்ருவுண்டாம் தாயாதி ஜனங்களுக்கு த்வேஷம் வரும் கலகம் விசனத்தைத் தரும் தன்னுடைய பிரபு வினல் பயம் வரும் அல்லது தாரம் புத்ராளுக்கு ஹானிவரும் கேசகமனம் வரும்.

குரு துதியசப்தமாதிகளுடன் கூடினல் அவமிருத்து பயம் வரும் அதற்கு உருத்ரஜெபஞ் செய்யவும்.

குருமகா திசையிற் சனிபுக்தி வருஷம்-2 மாதம்-6 நாள்-12

இதற்குப் பலன்

சனி ஸ்வக்ஷேத்திரத்தில் மித்ருஸ்தானத்திலாவது கேந்திர கோணங்களிலாவது அல்லது இலக்னுதிபதியுடன் கூடினலும் சௌக்கிய பலன் தனதான்யம் அன்னிய ஸ்திரீபோகம் எத்ன காரியங்களில் மேற்குதிக்கில் பிரயாணம்போனவிடத்தில் இராஜ தரிசனம் தனதான்ய லாபங்களுமுண்டாம் தீர்த்ததரிசனமாவது காட்டும்.

சனி 6-8-12-ல் நீசனய் அஸ்தங்கிசனய் சகல காரியங் களுக்கும் ஹானிவரும் பிதுர் மாதுர் புத்ர களத்ராள் இவைகளுக் காவது ஹானி வரும் சோராக்னிபயமாம்.

திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபயுக்தனனல் பந்து மித்ராள் கள் விரோதம் உத்தியோகத்திற்கு ஆனி தேகபிணியும் சுயஜன விரோதமுமாம்.

சனி துதியசப்தமாதிகளுடன் கூடினலும் சம்பந்தம் இருந் தாலும் அபமிருத்துவாம் அதற்கு விஷ்ணுஜெபமும் கருப்பு வஸ் திர தானமும் செய்யவும்.

குருமகா திசையிற் புதன்புத்தி வருஷம்-2 மாதம்-3 நாள்-6

இதற்குப் பலன்

விவசாய தனலாபங் கூடுதலால் புத்தி திசாநாதன் பார்வை பெற்றிருந்தாலும் கூடினலும் இராஜ்யலாபம் இராஜ்யப் பிரசாதம் நினைத்தகாரியங் கூடுதலும் வீட்டில் பசுசேர்க்கையும் சகல பாக் கியமுமுண்டாம்.

புதன் செவ்வாயுடன் கூடினாலும் பார்வைபெற்றாலும் சத்ரு பீடை பயமும் அதிசாரம் சுரரோகம் குய்யஸ்தானத்தில் ரோகமு மாம்.

புதன் ஸ்வக்ஷேத்திரகோண தனலாபத்திலிருந்தால் நஷ்ட மாய்ப் போன ராஜ்யம் அல்லது நஷ்டமான திரவியமுங் கிடைக் கும் பந்து ஜனங்கள் கலியாணப்பேச்சுகள் நடக்கும் பிள்ளைகள் மூலமாய் தனலாபங்களுங் கிடைக்கும் மேற்குதிக்கில் பிரயாணம் இராஜதரிசனம் எத்தனகாரியங் கூடுதலாம்.

புதன் 6-8-12-ல் பாபயுக்தனானால் பாபகன்மத்தைச் செய் வன் அநேக ஜனங்களுக் கிம்சைசெய்வன் பித்தம் அதிகரிக்கும் நிலபந்தனம் வரும் அல்லது ஸ்தானப்பிரஷ்டம் வரும் சர்ப்ப பீடை வரும்.

புதன் திசாநாதனுக்கு கேந்திரகோணலாபத்தில் நின்றால் தன்னூரில் தனலாபம் வரும் மாதுர் பிதுர்களுக்கு சௌக்கிய முண்டாம் இராஜரால் மந்திரிகளால் தயவுண்டாம் சாஸ்திர புராண புண்யதீர்த்தம் திருமாலை கிடைக்கும்.

6-8-12-ல் பாபயுக்தனால் சுபர் திருஷ்டியில்லாமலிருந்தால் கலகம் சோரபயம் மரணபயம் கிரகப்பிரவேசம் தேசகமனமாம்.

புதன் துவிதியசப்தமாதிபதிகளுடன் கூடினால் தேகத்திற்கு ஆனி வரும் விஷ்ணுஜெபஞ் செய்யவும்.

குருமகாதிசையிற் கேதுபுத்தி மாதம்—11 நாள்—6

இதற்குப் பலன்

கேது கேந்திரகோணத்தில் சுபருடன் கூடியிருந்தால் அவந் தரையான போஜனம் தலைநோய் வாதபித்தம் வரும்.

கேது சுபர்திருஷ்டி பெற்றிருந்தால் சுபபலத்தைக் கொடுக்கும்.

கேது பாபருடன்கூடி பாபர் திருஷ்டி பற்றிருந்தால் 6-8-12-லிருந்தால் தாரம் புத்ராளுக்கு ஆனி சத்ருபீடை வரும் பயம் இராஜகோபம் சேதம் பந்தனம் ரோகபீடை பெலயீனம் சாவு வார்த்தை சகோதரபீடை சௌக்கியமில்லாமையுமாம்.

கேது 2-7-லிருந்தால் தேகத்திற்கு உபத்ரவமுண்டாம் அல் லது தாரத்திற்காவது தோஷம்வரும் சாவல் தானஞ் செய்யவும்.

குருமகாதிசையிற் சுக்ரபுத்தி வருஷம்—2 மாதம்—8

இதற்குப் பலன்

சுக்ரன் ஸ்வக்ஷேத்ரகோணம் பரமஉச்சம் பெற்றிருந்தால் சர்வ அரசபோகம் தேசாந்திர ஐசுவரியம் ராஜாக்களுடைய தயவு தேசாதிகாரம் தனக்குச் சமானமா யிருக்கப்பட்டவ

னுடைய தயவு வடதிக்கில் பிரயாணம் போனவிடத்தில் இரா தரிசனம் தேவகுருபக்தி சகல காரியங்களும் சுபசௌக்கிய னுகும்.

சுக்கிரன் 6-8-12-ல் நீச்சத்தில் சத்ருவுடன் கூடில் சோரா கினிபயம் இராசபயம் சகல காரியத்திற்கும் ஆனிவரும் சுக்கிர துவிதிய சப்தமாதிபதிகளுடன் கூடில் அபமிருத்துத் தோஷ வரும் அதற்கு லட்சுமிசெபஞ் செய்தால் பரிகாரமாகும்.

குருமகாதிசையிற் குருபுத்தி மாசம்-9 நாள்-18

இதற்குப் பலன்

சூரியன் கேந்திரகோணங்களில் அஷ்டமாதிபதியுடனு அவன் பார்வையாயிருந்தாலும் முதலிலே வியசனம் சுரரோ நிலைவிட்டுப் பேருதல் பாபகன்மங்கள் செய்கிறது பயம் சத் பீடை பந்தனம் ஒரு கலகம் இவையுண்டாம்.

சூரியன் ஸ்வக்ஷேத்திர கேந்திரகோண லாபத்தில் சு ருடன் கூடி சுபர் திருஷ்டி பெற்றிருந்தால் கீர்த்திப்ரதாபம் எ யிடத்தில் போனுலும் மரியாதை கொஞ்சம் சிரவேதனை யு டாம் நினைந்த காரியங் கூடுதலுமாம்.

சூரியன் 6-8-12-ல் நீசத்தில் பாபியுடன் கூடி யிருந் எத்ன காரியம் விகாதம் அன்யதேசப் பிரயாணம் போன வி தில் சோராக்னிபீடை ஆயுதபயம் வரும் நாற்கால் ஜீவ ஆ வரும்.

சூரியன் திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்தில் தால் மனோதுக்கம் தேகாயாசம் திரிச்சல் இராசகோபமுமாம்.

சூரியன் திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் வயிற்றுநோ வியாதி சகல காரியத்திற்குங் குறைச்சல் வருகுமாம்.

துவிதிய சப்தமாதிகளுடன் கூடினுல் அபமிருத்துவ நிகள சந்தனம் வரும் அதற்கு கருமந்தீர செபஞ் செய்யவும்.

குருமகாதிசையிற் சந்திரபுத்தி வருஷம்-1 மாதம்-4

இதற்குப் பலன்

சந்திரன் கேந்திரகோண லாபத்தில் ஸ்வக்ஷேத்ரனு பூரணச் சந்திரனு யிருந்தால் இராச்சியலாபம் கீர்த்தியுண்ட தாரபுத்ர சௌக்கியம் இராசப்ரீதி ஆரோக்கியம் சுயசோபனு கள் யானை குதிரை அநேக லாபமும் சகல காரியமுஞ் செய சௌக்யமாய் விருத்தியா யிருக்கும்.

சந்திரன் சஷ்டாஷ்டம விரயத்தில் பாபருடன் கூடில் இ சத்வேஷம் பொல்லாங்கும் தேசப்ரஷ்டம் பீடை ரோகம் ச காரிய ஆனியாம்.

சந்திரன் திசாநாதனுக்கு 5-6-லிருந்தால் கிரகத்தில் இலட்மி கடாட்சமுண்டாம் சௌபாக்கியங்களு முண்டா யிருக்கும் சாநாதனுக்கு தனலாபத்திலிருந்தால் நித்யலாப முண்டா ருக்கும்.

சந்திரன் திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபருடன் கூடில் இரா த்வேஷம் நிகளபந்தனம் அன்னியதேசகமனம் சீதளசுரம் வை யுண்டாம்.

6-8-12-ல் சுபயுக்தனுனல் அல்ப சௌக்கியம் சொல்ப ாபம் சந்திரன் துவிதிய சப்தமாதிகளுடன் கூடினுல் கிலேசம் தற்கு துர்க்கை செபஞ் செய்தால் சௌக்யமாம்.

குருமகாதிசையில் அங்காரபுத்தி மாதம்-11 நாள்-6

இதற்குப் பலன்

அங்காரகன் ஸ்வக்ஷேத்திர திரிகோணத்திலிருந்தால் முற் ாதியில் அற்பலாபங் கொடுத்து கடைசியில் அர்த்த விரயமாகும் ிற்பாதி சௌக்யபலன் தனதான்யத்திற்கும் விருத்தி யுண்டாம் கோதரருக்கு ரணபயம் இராஜ மூலத்தில் வஸ்திர பூஷண ாகன லாபமுண்டாம்.

அங்காரகன் குரூர கிரகமானதினுல் தனதான்ய விரயம் வரும் 6-8-12-ல் 9-க்குடையவனுடன் கூடினுலும் பார்த்தாலும் தேகாரோக்யம் கிராமம் பூமிலாபங் கிடைக்கும் செலவு அதி ரிக்கும்.

6-8-12-ல் நீசனுனல் அக்கினிபயம் மற்றொருவர் மூலமாய் ரஸ்திரீபோகம் தன்னுடைய குலாசாரத்தைவிட்டு துஷ்ட டத்தை செய்வன்.

திசாநாதனுக்கு கேந்திர திரிகோணத்திலிருந்தால் இராஜ ரீதி சுபகருமங்கள் மற்றொரு இடத்திற்கு யுத்தமூலமாய் பிர ாணமும் போனவிடத்தில் இராஜ மூலத்தில் இலாபமும் வரும்.

திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபயுக்தனுனல் சகல காரியத் திற்கும் ஆனி வியசனம் பயமுண்டாம் நேத்ரவியாதி அன்ய தேசப் பிரயாணமாவது வரும்.

செவ்வாய் துவிதிய சப்தமத்திலிருந்தால் தேகசாட்யம் வரும் எருது தானஞ் செய்தால் தீரும்.

குருமகாதிசையில் இராகுபுத்தி வருஷம்-2, மாதம்-4, நாள்-24

இதற்குப் பலன்

இராகு பாபியுடன்கூடி கேந்திர கோணத்திலிருந்தால் விடாத கலகமுண்டாம் இஷ்டமான மனவிரோதமானவன் ஒருத்தனுடன் வாதாடுவன் தர்க்க கிலேசம் வரும் மேலெழுதிய ஸ்தானங்களில் சுபருடன் கூடினுல் சுபபலனுய் நடக்கும்.

இராகு 6-8-12-லிருந்தால் கலகம் இராஜ நிஷ்டூரம் திரு பயம் மனோவியாகூலம் பிசாசுவாதை சூதரசூன்யமுமாம்.

இராகு திசாநாதனுக்கு கேந்திரகோணத்தில் சுபருட பாபருடனுங் கூடினால் தாயாதிகளுக்கும் இவனுக்கும் விகா வரும் செய்யப்பட்ட காரியங்களுக்கு ஆனிவரும் மானபங் தேசகமனம் முற்பாதி கஷ்டம் பிற்பாதி சௌக்கியம் வரும்.

இராகு திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் பாபயுக்தனு முழுதுங் கஷ்டம் அந்தியத்தில் கொஞ்சம் சௌக்யம் அப்போ இராஜமூலத்தினால் சந்தோஷம் வரும்.

இராகு துவிதிய சப்தமத்திலிருந்தால் தேகஜாட்யம் வ அல்லது தாரககிலேசமாம் யாதொரு காரியங்களும் கெடு யாம் அதற்குச் சாவல் தானஞ் செய்தால் தீரும்.

குருமகாதிசை முற்றிற்று.

---

## சனிமகாதிசை வருடம்-19

### இதற்குப் பலன்

அபவாதமான வார்த்தைகளும் சோராக்கினி பீடையும் த தான்ய நஷ்டமும் பிதுர்வாக்கிய ஆனியும் கேந்திர திரிகோ ஸ்வக்ஷேத்திரத்தில் பெலத்திருந்தால் மண்டலாதிபதியா அல்லது ஒரு கிராமமாகிலும் அதிகாரஞ் செய்வன் பந்து கலகமுண்டு.

சனி 8-ல் பெலத்திருந்தால் தேசாந்திர வனவாசம் மர மோசம் சகசமாயிருந்த பட்டணத்திற்கு அதிகாரியாவான்.

சனி 3-9-லிருந்தால் இராஜ்யலாபம் இராஜாக்கள் அ சரிப்பு சனி 7-2-லிருந்தால் இராஜத்துவேஷம் எந்த காரி விரோதமாம் சகல காரியத்திற்கும் ஆனியாம் க்ஷயரோகபீ முதலில் ஸ்திரீ சகோதரநாசம் மத்தியில் அன்னியதேசத்திற் போகவரும் மற்றொரு ஊரிலேயாகிலும் வாசஞ் செய்வன் கடை யில் சௌக்கியபலன்.

### சனிமகாதிசையிற் சனிபுத்தி வருஷம்-3 நாள்-3

### இதற்குப் பலன்

சுபபலத்தைக் கொடுத்து இராஜ்யலாபம் நல்ல கீர்த்தி யானை முதலாகிய வாகனமுண்டாம் இராசிமாதத்தில் நினை காரியம் கைகூடுதலையாம் நாற்கால் ஜீவனால் இலாபமுண்டாம்.

சனி 6-8-12-ல் நீசபாபயுக்தனாயிருந்தால் ஆயுதத்தினு ஒரு காயமுண்டாம் நாவரட்சி சுரம் விஷத்தினாற் கிலேசமாம்.

சனி அஷ்டமாதிபதியுடன் கூடினால் அபமிருத்துதோ முண்டாம் அதற்கு எருமை தானஞ் செய்தால் தீரும்.

சனிமகாதிசையிற் புதன்புத்தி வருஷம்-2 மாதம்-8 நாள்-8

இதற்குப் பலன்

புதன் கேந்திரகோண ஸ்வக்ஷேத்ர லாபத்தில் சுபருடன் கூடி சுபர் அம்சை பெற்றிருந்தால் தன்னுடைய இராஜ்யத்திலாவது பிறர் இராஜ்யத்திலாவது பூஜிதனாய் இராஜயோகவாகனமுண்டாம்.

புதன்வர மோட்சரம்சை பெற்றிருந்தால் வெகு ஜனங்கள் போஷகனாயிருப்பன் சத்துருஸ்தானத்திலிருந்தால் புண்யதீர்த்த யாத்ரை பலன் நடக்கும்.

புதன் 6-8-12-ல் கேந்திரகோணத்தில் நீசனாய் சத்ருக்ஷேத்ரனாய் சூரியன் செவ்வாய் சனியாவது இவர்களுடன் கூடியிருந்தாலும் இராஜபயம் மித்ரனாகயிருக்கப்பட்டவன் சத்ருவாகிறதும் காரிய ஆனியும் பிரயோசன பங்கமுமாம்.

புதன் திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்திலிருந்தால் தேக சௌக்யம் ஆயுராரோக்கியம் வித்யாலாபம் இராஜாவினால் தேசகிராமங்கள் அதிகாரஞ்செய்வன்.

இந்த புத்திகடைசியில் தேகபிணியும் அபவாதமான வார்த்தை பந்துக்கள் மரணமாம்.

புதன் திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபருடன் கூடினால் பார்வையாவ திருந்தால் பரமயுக்தனாய் அற்பசௌக்கியமும் முதலில் நடந்து அந்தியத்தில் வாகனபூஷண லாபங்களுண்டாம் தேவ குரு பக்தியுமாம்.

புதன் துவிதியசப்தமாதிபதிகளுடன் கூடினால் அன்னிய விடங்களுக்குப்போகவும் குய்யஸ்தானத்தில் ரோகம் சோராக்னி இராஜபயம் அபமிருத்துவாம் இதற்கு விஷ்ணுஜெபஞ் செய்யவும்.

சனிமகாதிசையிற் கேதுபுத்தி வருஷம்-1 மாதம்-1 நாள்-9

இதற்குப் பலன்

மற்றொரு இடங்களுக்குப்போக வரும்வழியில் ரணபயம் காண்பிக்கும் ஆலசியமான புத்தியைக் கொடுக்கும்.

கேது பாபயுக்தனானால் தரித்திரபந்தனம் தன்னுடைய எஜமானுக்கு விசனம் வரும்.

கேது இலக்னாதியுடன் கூடினால் முதலில் சௌக்யம் கங்கா தீர்த்த ஸ்நானங் கிடைக்கும்.

கேது திசாநாதனுக்கு கேந்திரதிரிகோண சஷ்டாங்கமாய் விரயத்திலிருந்தாலும் அபமிருத்து தோஷம் வரும் தலைநோய் மார்புநோய் காண்பிக்கும் ஸ்தானப்பிரஷ்டம் வரும்.

கேது மேலெழுதிய ஸ்தானங்களி லிருந்தாலும் கஷ்டபலன் இதற்குப்ரீதி ஸ்நானஞ்செய்யத் தீரும்.

### சனிமகாதிசையிற் சுக்ரபுக்தி வருஷம்-2, மாதம்-3

### இதற்குப்பலன்

சுக்ரன் ஸ்வக்ஷேத்திர கேந்திர திரிகோண லாபத்திலிருந்தால் பாக்யவிருத்தி கோவிருத்தி கேந்திரலாபம் தீவாந்திர வஸ்துக்கள் வரும்.

சுக்ரன் சனியுடன் கூடினால் யோகபலனும் சகல காரியமும் ஜெயமாம்.

சுக்ரன் சத்ருக்சேத்ர நீச அஸ்தங்கிதனாய் 6-8-12-லிருந்தால் கிலேசம் இராஜ நிஷ்டூரம்.

சுக்ரன் திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்தில் நின்றால் சேவகம் பிராமணபூஜை புராணகாவிய கேள்வியும் படிப்பும் சத்கருமங்கள் செய்கையும் இகபரசாதகமும் சத்திர சாமரைகளுண்டாம்.

சுக்ரன் திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் நேத்ரரோகம் ஊஷ்ணாதிகளுண்டாம் குலஸ்திரீ விக்னமும் பல்நோய் சூலை மார்புநோய் அன்னவஸ்திரத்திற்கு வருத்தமுமாம்.

சுக்ரன் துவிதிய சப்தமாதிகளுடன் கூடினால் அபமிருத்து தோஷம் வரும் அதற்கு துர்க்கைஜெபஞ் செய்யவும்.

### சனிமகாதிசையில் சூரியபுத்தி மாதம்-11 நாள்-12

### இதற்குப் பலன்

சூரியன் இலக்னாதிபதியுடன் கூடினால் முதலில் பயத்தைக் கொடுக்கும் மத்தியில் கடைசியில் விசனத்தைக் கொடுக்கும்.

சூரியன் இலக்கினத்தில் சந்திரனுடன் கூடியிருந்தால் தாயாதி நிஷ்டூரம் பயம் ரோகம் குருபார்த்தால் சத்ருக்களுக்கு ஆனிவரும் போகபாக்ய முண்டாம்.

சூரியன் சனி இராகுவுடன் கூடினால் செவ்வாயுடன் கூடியிருந்தால் பிணிகாலனும் தன்னுடைய பிரபுக்கு பயமுண்டாம் தேசம் போய் திரிவன் சகலத்திற்கும் ஹானியாம்.

சூரியன் திரிகோணலாபத்திலிருந்தால் புண்ய கதைகள் கேள்வியும் விவசாயங் கூடுதல்.

சூரியன் நீசத்தில் சத்ரு ஸ்தானத்தில் 6-8-12-லிருந்தால் தேகத்திற்கு தாபசுரமானபீடை பிதுர்க்கிலேசம் நானாவித வியாகூலம் சோராக்கினிபயம் உண்டாம்.

சூரியன் திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்திருந்தால் அன்யதேசகமனம் அவந்தரையான போஜனம் உத்யோகமாம்.

சூரியன் திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் துஷ்டரால் கஷ்டத்தைக் கொடுக்கும்.

சூரியன் துவிதிய சப்தமாதிகளுடன் கூடினாலும் அந்த ஸ்தானங்களில் நின்றாலும் அவர்கள் பார்வை யிருந்தாலும் அபமிருத்து தோஷமுண்டாம் அதற்கு சூரியஜெயம் செய்யவும்.

சனிமகாதிசையிற் சந்திரபுத்தி வருஷம்–1 மாதம்–7

இதற்குப் பலன்

சந்திரன் சுபர் திருஷ்டியிருந்து சுபனுடன் கூடினால் இராஜ்யப் பிராப்தி இராஜாபிஷேகம் அல்லது நூதனமா யிருக்கப்பட்ட பிரபுக்கள் சிநேகம் வாகனபூடணம் பிதுர் மாதுர்சௌக்கியம் பால் பசு விருத்தி அதிகபலமாம்.

பூரணச்சந்திரனாய் உச்ச ஸ்வக்ஷேத்ர கேந்திர திரிகோணத்திலிருந்தால் மேலெழுதியபடி பலன் கொடுக்கும் நினைத்த காரியஞ் செயமாம்.

பூரணச்சந்திரனாய் பாபயுக்தனாய் பாபர் பார்வை யிருந்தாலும் நீசத்திலிருந்தாலும் துருவாமிசை பெற்றிருந்தாலும் மிகுதியும் கஷ்டத்தைக் கொடுக்கும் தேக ஆயாசமாம்.

சந்திரன் திசாநாதனுக்கு கேந்திரகோண லாபத்தில் நின்றால் தனப்ராப்தி தேககிராமாதிபத்யம் சகல காரியம் சித்தியாம்.

சந்திரன் திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் ஜெயம் சவுக்யம் சத்ருநாசம் போகபாக்கியம்.

சந்திரன் மேலெழுதியபடி பாபயுக்தனாய் பாபர்திருஷ்டி பெற்றிருந்தால் மாதுர் பிதுர் ஆனி ஸ்தானப்பிரஷ்டம் நிகளபந்தனம்.

சந்திரன் துவிதிய சப்தமாதிகளுடன் கூடி பாபயுக்தனாயிருந்தால் மாரகங் கொடுக்கும் அதற்கு திரியம்பகிசெபஞ் செய்யவும்.

சனிமகாதிசையிற் செவ்வாய்புத்தி வருஷம்–1 மாதம்–4 நாள்–9

இதற்குப் பலன்

செவ்வாய் ஸ்வக்ஷேத்ர கேந்திர திரிகோண லாபத்தில் திசாநாதனுடன் கூடினாலுஞ் சுரம் தாபம் வாதபித்தம் செவ்வாய் லக்னாதிபதியுடன் கூடி ஸ்வக்ஷேத்ரராயிருந்தால் சந்தோஷமான வாகனம் பூஷணம் சேனாதிபத்யம் ஏது காரியங்களும் ஜெயமாம் செவ்வாய் இலாபாதிபதியாயிருந்து திசாநாதன் இலக்னாதிபதியாயிருக்க யுத்தத்திற் போகிறவன் ஜெயப்பிரதாபமாவன் இராஜ்யம் வரும் பூபாலன் சகோதர ஆனி ஆரோக்கியம்.

செவ்வாய் அஷ்டமாதிபதியுடன் கூடினாலும் துவிதியாதியுடன் சனியுடன் கூடினாலும் அபமிருத்துண்டாம் எருது தானஞ் செய்யவும்.

செவ்வாய் 6–8–12-ல் நீசனாகில் அஸ்தங்கிதனா யிருந்தால் தனவருத்து கலியாண சம்பிரமமாம் புத்தி கடைசியில் விசனத்தைத் தரும் ஸ்தானப்பிரஷ்டம் வரும்.

சனி மகாதிசையில் இராகுபுத்தி வருஷம்-2 மாதம்-10 நாள்-6

இதற்குப் பலன்

மனோவியாகூலம் தேகபீடை தனவிரயம் வரும்.

இராகு இலக்னாதியுடன் கூடினால் புத்தி முதலில் சௌக்யம் மத்தியில் விசனம் கடைசியில் சாவுவார்த்தை கேள்வியும்.

இராகு ரிஷப கடக கன்னி மாதங்களில் மிதுனத்தி லிருந் தால் இலக்னாதிபதியுடன் கூடினால் சமான ஜனங்களினால் மரி யாதை இராஜாவினால் மரியாதை கிடைக்கும் மேற்குதிக்கில் பிர யாணம் வரும் போனவிடத்தில் காரியங் கூடுதலையுண்டாம்.

இராகு செவ்வாயுடன் கூடியிருந்தால் தாராக்கிலேசம் துவி திய சப்தமாதிகளுடன் கூடியிருந்தால் அற்ப சௌக்யம்.

இராகு 6-8-12-லிருந்தால் திரிகோணத்திலே சுபனுடன் கூடினால் அற்பசௌக்கியம் பாவியுடன் கூடினால் மகாபயம் க்ஷய ரோகம் பசாச சூத்ரசூன்யம் வியாகூலப்படுவன்.

இராகு சுபர் திருஷ்டி பெற்றிருந்தால் இராஜப்ரீதி விவாகம் எக்காலமும் தானதருமம் ஞானமாம்.

சனி மகாதிசையிற் குருபுக்தி வருஷம்-2 மாதம்-6 நாள்-12

இதற்குப் பலன்

குரு கேந்திரகோண லாபத்தில் உச்சஸ்வக்ஷேத்ரனாய் சுப னுடன் கூடி சுபாம்சை பெற்றிருந்தால் நற்கீர்த்தி சேனாதிபத்யம் தேவப்பிராமணாள் பூசை வீட்டில் இலட்சுமிகடாட்சம் பொருந்தி யிருக்கும் வாயு மூலையில் பிரயாணம் போனவிடத்தில் இராஜ தரிசனம் வஸ்திர பூஷண வாகனலாபம் சண்டை முகத்தில் ஜயமும் யாதொரு காரியமும் குறைவில்லாமல் நடக்கும்.

குரு 6-8-12-ல் சுபர் பாபருடன் கூடினால் அற்பலாபம் சொற்ப சௌக்யம் பலசித்தம் பாபகர்மங்கள் துஷ்டஸ்திரீ அனு போகம் செய்வன்.

குரு திசாநாதனுக்கு கேந்திரகோண இலாபத்திலிருந்தால் தார சௌக்யம் இராஜஸ்திரீ யுடைத்தானவனானால் தனசம்பத் தும் வாகனாதி லாபத்துடன் கூடினவன் பிரதாபமும் கீர்த்தியும் நவரத்ன மிழைத்த பூஷணாலங்காரமும் ஞானார்த்தமுமாம்.

குரு திசாநாதனுக்கு 6-8-12-ல் நீசனுடன் கூடினாலும் முதலில் கஷ்டம் விசனம் பந்தனம் கலகம் தேக பிணியும் சகலத் திற்குங் குறைச்சலாம்.

குருமேலெழுதிய ஸ்தானங்களில் பரம உச்சாம்சை பெற் றிருந்தால் நூதனமாய் பிரபுக்களைக் காண்கிறதும் தனப்பிராப்தி யும் புத்ர பௌத்ர விருத்தியுமாம் கடைசியில் பிணிகாணும்.

குரு துவிதிய சப்தமாதிபதிகளுடன் கூடியிருந்தால் அவமிருத்து தோஷம் வரும் விஷ்ணுசெபஞ் செய்யவும்.

சனி மகாதிசை முற்றிற்று.

---

## புதன் மகாதிசை வருடம்-17

### இதற்குப் பலன்

நல்ல ஸ்திரீகளுடனே சங்கமாய் கேளிவிலாசம் எந்த வாகனம் வேண்டுமோ அந்த வாகனமுண்டாம் பொன் முதலிய இரத்தினங்களிழைத்த பூஷணமும் விவசாயமும் வியாபார விருத்தியும் பிள்ளைகள் பிறக்கிறதுமாம்.

புதன் ஸ்வக்ஷேத்திரத்திலிருந்தால் வித்யாலாபம் பசுக்கள் பிராசுகள் இஷ்டான்னபோஜனம் புதன் கேந்திரத் திரிகோண ஸ்வக்ஷேத்ரத்திலிருந்தால் கீர்த்தியுள்ளவனுய் ஒருவர்க்காகிலும் ஞானபோதனை செய்வன்.

புதன் 6–8–12-ல் நீசத்தில் நீசாம்சையிலாவது இருந்தால் சகல காரியத்திற்கும் ஆனியாம்.

### புதன் மகாதிசையிற் புதன்புத்தி வருஷம்-2 மாதம்-4 நாள்-27

### இதற்குப் பலன்

புதன் கேந்திரத் திரிகோண லாபத்தில் சுயக்ஷேத்திரனுயிருந்தால் வியாபாரம் தனதான்யம் வித்தியாலாபம் வீட்டில் கலியாணம் சம்பிரம மரியாதை இரத்னலாபம் வித்யாகீர்த்தியும் நூதன பிரபுக்கள் தரிசனமாம்.

புதன் 6–8–12-ல் நீசபாபயுக்தனுய் அஸ்தங்கிதனுயிருந்தால் சூலைரோகம் கிரகப் பிரவேசம் இராசகாரியத்தில் லாபமும் உண்டாம்.

புதன் துவிதியசப்தமாதிபதிகளுடன் கூடினுல் தாரக்கிலேசம் அல்லது ஆத்மசம்பந்தமான ஜனங்களுக்கு ஆனிவரும் விஷ்ணுஜெபஞ் செய்யவும்.

### புதன் மகாதிசையிற் கேதுபுத்தி மாதம்-11 நாள்-27

### இதற்குப் பலன்

கேது இலக்னகேந்திரகோண சுபருடன் கூடி சுபர் திருஷ்டி பெற்றிருந்தாலும் இலக்னுதிபதியுடன் கூடினுலும் அற்ப சௌக்கியம் சொற்பலாபம் பந்துசிநேகம் திரிச்சல் மேற்குதிக்கில் பிரயாணம் போனவிடத்தில் காரிய விகாதம்.

கேது 6–8–12-ல் பாபருடன் கூடி பாபர் திருஷ்டி பெற்றிருந்தால் ஒரு வாகனத்திலிருந்து கீழே விழவும் புத்ரசோபமும் சோராக்னிபயம் இராஜபயம் பாபகருமஞ் செய்கையுண்டாம்.

விருச்சிகத்திலிருந்தால் விஷபீடை யுண்டாம். நீச்சனுல் காலத்தில் அவஸ்தைப்படுவன் துக்கத்தை யடைவன் தி லுண்டாம்.

கேது துவிதிய சப்தமாதிபதிகளுட னிருந்தால் தேகஜாட் வரும் சாகரஸ்நானஞ் செய்யத் தீரும்.

புதன் மகாதிசையில் சுக்ரபுத்தி வருஷம்-2 மாதம்-10

இதற்குப் பலன்

சுக்கிரன் குருவுடன் கூடினுல் புண்ய கதைகளைக் கேட் மித்ரரால் பிரபு சிநேகிதமாகும் சகல லாபமுண்டாம்.

சுக்கிரன்புத்தி நடக்கையில் கன்னி விருச்சிகம் தனுசு சி மேஷம் இந்த ஐந்துமாதங்களில் சுக்கிரனுக்குக் குரூரமாசம தால் சுரபயம் தாரநிஷ்டூரம் கிழக்குத்திக்கில் போக்குவரத் நாற்கால் ஜீவனுற் பயமுமாம்.

சுக்கிரன் சூரியனுடன் கூடினுல் அற்பசௌக்யம் சொ வித்தையாம்.

சுக்கிரன் திசாநாதனுடன் கூடினுலும் கேந்திரகோண க்ஷேத்ர லாபத்திலிருந்தாலும் இராஜ்யம் பூமி கிராமம் விவசா பசுக்கள் எக்யம் தீட்சைகள் அசுவலாபமும் இராஜயோகங் கிடைக்கும் கிணறு குளம் தானதருமம் இவைகள் உண்டாம்.

சுக்கிரன் துவிதிய சப்தமாதிபதிகளுடன் கூடினுல் ே ஜாட்யமாம் அதற்கு துர்க்கை இலட்சுமி ஜெபஞ் செய்யவும்

புதன் மகாதிசையிற் சூரியபுத்தி மாதம்-10 நாள்-6

இதற்குப் பலன்

சூரியன் ஸ்வக்ஷேத்ரகேந்திர திரிகோணத்திலிருந்த இராஜ பிரசாதமும் பிறகு சிநேகிதராலும் சூரியன் செவ்வா பார்வை பெற்றிருந்தால் பூமிலாபமுண்டாம் இலக்னுதிபதியுட கூடினுல் முதலில் தனவரத்தும் மத்தியிலுங் | கடைசியி விசனத்தைக் கொடுத்து சாவுவார்த்தை கேட்கப்படும்.

சூரியன் செவ்வாய் சனி இராகு கூடினுலும் அவர்கள் ப வையானுலும் தேகத்தில் ரணங்காண்பிக்கும் மனஸ்தாபம் வரு இராஜாவினுலும் சுயசயனங்களினுலும் உபத்ரவம் வரும்.

சூரியன் 6-8-12-ல் சத்ரு வீட்டிலிருந்தால் விஷபயம் சோ பயம் ஸ்தானப்பிரஷ்டம் வரும் ஆயுதபயமுமாம் பூமி நாற்கா ஜீவன நஷ்டம் மாதுர் பிதுர் கிலேசம் அதிசாரரோக பயமாம்.

சூரியன் துவிதிய சப்தமாதிபதிகளுடன் கூடினுல் அ மிருத்து வரும் அதற்கு சூரியஜெபஞ் செய்யவும்.

## புதன் மகாதிசையிற் சந்திரபுத்தி வருஷம்-1 மாதம்-5

### இதற்குப் பலன்

சந்திரன் கேந்திர திரிகோண ஸ்வக்ஷேத்ரனாய் சுபர் திருஷ்டி பெற்றிருந்தால் இராஜப்ரீதி சௌக்யம் விசேஷ தன லாபம் ஸ்திரீலாபம் நூதனக்ரகம் இஷ்டான்ன போஜனம் சங்கீதங் கேட்கிறதும் புத்ராள் பிறக்கிறதும் தெற்குதிக்கில் பிரயாணம் பேரனவிடத்தில் இராஜப்ரீதியும் தீவாந்திரவஸ்து லாபமுமாம்.

சந்திரன் 6–8–12-ல் நீசனாய் சத்ருவீடாய் பாபர்கூடி பாபர் திருஷ்டி யிருந்தால் பூரணச்சந்திரனானாலும் சௌக்யக் குறைச்சலும் தேகபிணியும் காரியவிக்னமும் மனஸ்தாபமும் சர்வஜன விரோதமும் தன் பிரபுக்கு ஆனியுமாம்.

சந்திரன் குரு சுக்கிரன் கூடி திசாநாதனுக்கு கேந்திர திரிகோண லாபத்திலிருந்தால் புண்யதீர்த்த ஸ்நானபலனும் தன் குருவினாலே கூடுதலும் தனச்சேர்க்கையும் வித்யாவிலாசமும் புராண கதைகள் கேள்வியும் உண்டாம்.

சுக்கிரன் 6–8–12–ல் பாபருடன் கூடினாலும் தன்னூரில் அதிகாரம் மாதுர்கிலேசமுமாம்.

சந்திரன் துவிதிய சப்தமாதிபதிகளுடன் கூடினால் நேக கஷ்டயமாம் அதற்கு துர்க்காதேவி ஜெபஞ் செய்யவும் வெள்ளிப் பதுமை தானம் பண்ணவும்.

## புதன் மகாதிசையிற் செவ்வாய்புத்தி மாதம்-11, நாள்-27

### இதற்குப் பலன்

செவ்வாய் கேந்திரகோண உச்ச ஸ்வக்ஷேத்ரனாய் இலக்கினாதிபதியுடன் கூடினால் இராசப்ரீதி வெகுலாபம் நஷ்டமான திரவியங் கூடி வரும் விவசாயமாம்.

செவ்வாய் சஷ்டாஷ்டம விரயத்தில் நீசனால் சத்ரு வீட்டிலிருந்து பாபர் திருஷ்டியிருந்தாலும் தேகத்திற்கு தாபசுரம் நாற்கால்சீவன் ஆனி கலகம் பிணி ரோகம் ஸ்தானப்பிரஷ்டம் வரும்.

செவ்வாய் திசாநாதனுக்கு கேந்திர திரிகோண லாபத்தில் பாபருடன் கூடி திருஷ்டி பெற்றிருந்தாலும் மாதுர் ஆனி மனோ பிரதிகூலம் அஷ்டகீர்த்தி மானபங்கம் அபாயம் சர்வ விதத்திலும் ஈனம் வரும்.

செவ்வாய் மேலெழுதிய ஸ்தானத்தில் சுபர் திருஷ்டி பெற்றிருந்தால் எழுதிய பலன்கள் கூடாமல் அற்ப சௌக்கியம் அற்பலாபம் நஷ்டபலனும்.

செவ்வாய் திசாநாதனுக்கு 6–8–12–ல் பாபருடன் கூடினால் கஷ்டமான பீடை சோராக்கினி ஆயுதபயம் பந்துக்கள் சகோதர ஆனி அன்னியதேசவாசம் நிகளபந்தனம் துவிதிய சப்தமாதிபதியுடன் கூடினால் அபமிருத்துவாம் அதற்கு மூர்த்தி ஜெபஞ் செய்யவும்.

புதன் மகாதிசையில் இராகுபுத்தி வருஷம்-2, மாதம்-6 நாள்-

## இதற்குப் பலன்

தாரக்கிலேசமும் சோராக்னி விஷபீடை அகால போஜன கலகம் வியாதி பீடை ஸ்தானப்பிரஷ்டம் வரும்.

இராகு கேந்திரகோணத்தில் சுபருடன் கூடினால் இரா பிரீதி யுண்டாம் கேள்வி விசாலமாய் சௌக்யமான போஜன களும் ஆரோக்கியம் கீர்த்தி சகல லாபமுமாம்.

இராகு 6-8-12-ல் திசாநாதனுங் கூடினல் சுயஜன நிஷ்டு நிலம்விட்டுப் போனதையும் பந்தனம் ரோகம் பீடையுமாம்.

இராகு துவிதிய சப்தமாதிபதிகளுடன் கூடினலும் அ ஸ்தானத்திலிருந்தாலும் இலட்சுமீகரமில்லாமல் சூலை ரோ தினல் பிணியும் மரணத்திற்குக் காரணம் வரும் துர்க்காதே ஜெபம் சாவல் தானம் செய்யவும்.

புதன் மகாதிசையிற் குருபுத்தி வருஷம்-2, மாதம்-3, நாள்-

## இதற்குப் பலன்

கேந்திர திரிகோண ஸ்வக்ஷேத்திரத்தில் இலாபம் வ பெற்றிருந்தால் இராஜப்ரீதி கதநாகமம் கலியாண சம்பிரமம் எருமை, புராணகாவியம் தியானம் சமாதி ஜெபதபம் தேவக் பக்தி யாத்திரை சத்கருமங்கள் சர்வ சித்தியுமாம்.

குரு 6-8-12-ல் நீச அஸ்தங்கிதனாய் சனி செவ்வாயுட கூடி யிருந்தால் கலகம் இராஜநிஷ்டூரம் பிணி சோராக்கினிப மாதுர் பிணியும் இராஜகோபம் தனச்சேதமாம்.

குரு திசாநாதனுக்கு கேந்திர திரிகோண லாபத்தில் மாயிருந்தால் பந்துபூசிதனாய் மனோற்சாகமாய் சுபசோபன பத்துக்களுண்டாய் அன்னதான மிகவுஞ் செய்வன்.

குரு திசாநாதனுக்கு 6-8-12-ல் பெலனில்லாதவனா யி தால் களத்ரபுத்ரவிரோதம் பிணி இராஜகோபத்தினால் த சேதம் இருந்தாற்போலிருந்து அபமிருத்து பயமுண்டாம்.

குரு துவிதிய சப்தமாதிகளுடன் கூடினால் தேகத்தில் பி காண்பிக்கும் அதற்கு சிவஜெபம் கோதானம் பூதான செய்யவும்.

புதன் மகாதிசையிற் சனிபுத்தி வருஷம்-2, மாதம்-8, நாள்-

## இதற்குப் பலன்

கேந்திரகோணலாப உச்சனாய் சுபர்வீட்டில் ஸ்வக்ஷேத் உச்சத்தில் இலக்னாதிபதியுடன் கூடியிருந்தாலும் சிவ திஷ்டை செய்வன் சேனாதிக்கம் வரும் சேது ஸ்நானபலன் வ வீட்டில் பசு சேர்க்கையுமாம்.

சனி 6-8-12-ல் நீசத்தில் சத்துரு ஸ்தானத்திலிருந்தால் தேக பிணியும் காரிய விசனமும் ஸ்தானப்ரஷ்டமும் வரும்.

சனி திசாநாதனுக்கு கேந்திர திரிகோணத்தில் சுபருடன் கூடினுல் இராஜப்ரீதியும் குதிரையுண்டாம்.

சனி திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபியுடன் கூடினுலும் துக்கம் தாரம் புத்திர கிலேசம் புத்திர பலம் அன்னியதேசமனம் கால் நடையான திரிச்சலுமாம்.

சனி துவிதிய சப்தமாதிகளுடன் கூடினுலும் அந்த ஸ்தானத்திலிருந்தாலும் தேகத்திற்கு பிணிகாணும் அதற்கு ஜெபஞ் செய்யவும்.

புதன் மகாதிசை முற்றிற்று.

---

## கேது மகாதிசை வருடம்-7

இதற்குப் பலன்

கேது கேந்திரகோண லாபத்திலிருந்தால் தேச கிராமங்கள் அதிகாரம் அன்னிய தேசசஞ்சாரம் புத்ர தாரங்களால் சஞ்சாரம் ஆதியில் இராஜயோகம் மத்தியிலும் அந்தியத்திலும் அதிக பலனுண்டு.

கேது சுபருடன் கூடி திருஷ்டி பெற்று பாக்யகன்மாதி சுபர்களுடன் கூடினுல் புண்யதீர்த்தமான கங்காதீர்த்த பலனுண்டாம்.

கேது லக்னஸ்தானத்தில் 6-8-12-ல் பாபருடன் கூடி பாபர் திருஷ்டியாயிருந்தாலும் நிகளபந்தனம் ஸ்தானப்பிரஷ்டம் மூத்ர சூன்யரோகமாவது பாண்டுரோகமாவது காட்டும் குஷ்டம் விஷ பீடை யுண்டாம்.

கேது மகாதிசையில் கேதுபுத்தி மாதம்-4 நாள்-27

இதற்குப் பலன்

கேது கேந்திரகோணலாபத்தில் லக்னுதிபதியுடன் பாக்ய கர்மாதிகளுடன் கூடினுல் புண்யதீர்த்த ஸ்நானம் தேவகுரு தரிசனம் யுத்தத்தில் ஜெயமும் இராஜப்ரீதியும் நினைத்த காரியங் கைகூடுதலுமாம் சஷ்டாஷ்டம வியத்திலிருந்தால் தேசசஞ்சாரங்களும் அந்திர தாகமும் அதிகக் கிலேசமாம்;

கேது துவிதிய சப்தமத்திலிருந்தால் அபமிருத்துதோஷம் வரும் சாகரஸ்நானஞ் செய்யவும்.

கேது மகாதிசையில் சுக்கிரபுத்தி வருஷம்-1 மாதம்-2

இதற்குப் பலன்

சுக்கிரன் கேந்திரகோண இலாபத்தில் உச்சஸ்வக்ஷேத்திரம் பெற்றிருந்தால் புத்ர தாரங்கள் விர்த்தியும் இராசப்ரீதியும் சௌக்

கியம் யானை முதலிய வாகனங்களும் வீட்டில் லட்சுமி விலாசம் பொருந்தி யிருக்கும்.

சுக்கிரன் பாக்கிய கர்மாதிபதிகளுடன் கூடியிருந்தால் நஷ்ட ராச்சியம் நஷ்டமான திரவியம் வாகனசுகம் சேதுஸ்நானமும் தேவகுரு இராசப்ரசாதமுண்டாம்.

சுக்கிரன் 6-8-12-ல் நீசத்தில் நீசனுடன்கூடி பாபர் திருஷ்டி பெற்றிருந்தால் மார்வலி மரணம் சகல காரியத்திற்கும் ஆனி சபல புத்தியும் தாரம் புத்ராள் தனதான்யம் நஷ்டம் கிலேசமு மாம்.

சுக்கிரன் திசாநாதனுக்கு கோணகேந்திர லாபத்தில் விருச்சிகத்திலிருந்தால் தேகாரோக்கியம் சுகம் வீட்டில் கலியாண சோபனமாம்.

சுக்கிரன் திசாநாதனுக்கு 6-8-12-ல் பாபனுடன் கூடி யிருந்தால் இருந்தாப்போலிருந்து ஒரு கலகமுண்டாம் பசு தன தான்யங்களுக்கு ஆனி பந்துதுவேஷம் சிரரோகம் சுக்கிரன் துவிதிய சப்தமாதிகளுடன் கூடினால் தேகசாட்யம் வரும் அதற்கு துர்க்கை செபஞ் செய்யவும்.

## கேது மகாதிசையில் சூரியபுத்தி மாதம்-4 நாள்-6

## இதற்குப் பலன்

சூரியன் கேந்திரகோண லாபத்தில் ஸ்வக்ஷேத்திர மித்ர ராசியிலிருந்தால் தனதான்யம் சுபகாரியம் இஷ்டசித்தி தாரம் புத்ர சௌக்கியம் நினைத்தகாரியஞ் செயம்.

சூரியன் 6-8-12-ல் பாபருடன் கூடினால் இராஜபீடை மாதுர் பிதுருக்கு ஆனி தன்னை பெற்றவனுக்குக் கஷ்டம் பித்த பாண்டு ரோகம் மரணம் தேசாந்திரசஞ்சாரம் சோராக்னிபயம் இராசமந்திரி விரோதம் இராசகோபத்தால் தனவிரயம் அல்லது தாரக்கிலேசம் சனிவாரத்தில் மனஸ்தாபம் சோமவாரத்தில் சந்தோஷம் புத்தி கடைசியில் சௌக்கியபலனும் அற்பலாபமுமாம்.

சூரியன் திசாநாதனுக்கு திரிகோண இலாபத்திலிருந்தால் சௌக்யபலனும் தலைநோய் கொஞ்சமாயிருக்கப்பட்ட காரியங் கூடும்.

துவிதிய சப்தமாதிகளுடன் கூடியிருந்தால் அபமிருத்து தோஷம் வரும் சூரியசெபஞ் செய்யவும்.

## கேது மகாதிசையிற் சந்திரபுத்தி மாதம்-7

## இதற்குப் பலன்

கேந்திரகோண லாபத்தில் ஸ்வக்ஷேத்திரனாய் சுபனுடன் கூடி யிருந்தால் இராச்சியலாபம் மனோற்சாகம் கலியாணம் வாகனபூடணம் புத்திரசம்பத்து சர்வகாரியஞ் சித்திக்கும்.

6-8-12-ல் பாபயுக்தனாய் நீசம்பெற்றிருந்தால் அற்ப சௌக்யம் மனஸ்தாபம் காரியவிக்னம் தேகசாட்யம்.

சந்திரன் மேலெழுதிய ஸ்தானங்களில் சுபனுடன் கூடினு லும் திருஷ்டி பெற்றாலும் தருமவிர்த்தியும் தாமிசத்தின்பேரில் காரிய சித்தியும் வீட்டில் பசுக்கள் சேர்க்கையுமாம்.

சந்திரன் திசாநாதனுக்கு கேந்திரகோணலாபத்தில் சுப ருடன் கூடினுல் விவசாயங்கூடுதலும் வித்தையும் விசித்திரமான பூடணலாபமும் நல்லபுட்பாலங்காரமும் நல்லரூபத்தையுடைய பந்துஜெனங்களுக்கு பூசிதனு யிருப்பான்.

சந்திரன் திசாநாதனுக்கு 6-8-12-ல் அட்டமாதிபதியுடன் கூடி யிருந்தால் தனதான்ய ஆனியும் வியாகூலம் பிராண த்வேஷம் மிகுந்தகோபம் பள்ளத்தில் கிணற்றில்விழவும் கணக்கு வழக்கு ஆசன ரோகமாம்.

துவிதிய சப்தமாதிகளுடன் கூடினுலும் சந்திரன் துதியாதி பதியா யிருந்தாலும் அபமிருத்து தோஷமுண்டாம் சத்தி ஜெபஞ் செய்யவும்.

## கேது மகாதிசையில் செவ்வாய்புத்தி மாதம்-4 நாள்-27

### இதற்குப் பலன்

செவ்வாய் கேந்திர திரிகோணத்தில் ஸ்வக்ஷேத்திரனுய் சுபருடன்கூடி, சுபர் திருஷ்டி பெற்றிருந்தாலும் கிராமபூமியாம் தனதான்ய விருத்தியும் நாற்கால்சீவன் விர்த்தியும் வீடுமிராசு களுமாகும்.

செவ்வாய் 6-8-12-ல் நீசனுய்ப் பாப யுக்தனுனுல் சோராக் கினி பயம் சத்துரு விர்த்தியும் பசாசுபயம் ஸ்தானப்பிரஷ்டம் செவ்வாய் பாக்கிய கர்மாதிகளுடன் கூடினுல் பூபாலம் சௌக்கிய பலனும்.

திசாநாதனுக்கு கேந்திர திரிகோண லாபமாகிய விருச்சி கத்திலிருந்தால் இராஜப்ரீதி இதன் மூலமாய் இலாபம் புத்ர மித் ராள் சௌக்கியமுமாம்.

செவ்வாய் திசாநாதனுக்கு 6-8-12-லும் இரண்டிலு மிருந் தால் மரணம் வரும் அல்லது தேசவாசம் வரும் சோராக்னி பய மாம் புத்தி கடைசியில் கொஞ்சம் சௌக்கியத்தைக் கொடுக்கும்.

துவிதிய சப்தமாதிகளுடன் கூடினுல் தாபசுரம் விஷபயம் தாரபீடை அபமிருத்து தோஷமாம் அதற்கு எருதுதானஞ் செய் தால் தீரும்.

## கேது மகாதிசையில் இராகுபுத்தி வருஷம்-1 நாள்-18

### இதற்குப் பலன்

இராகு ஸ்வக்ஷேத்திர மித்ர லாபத்திலிருந்தால் தனலாபம் சஞ்சாரம் திரிச்சல் மிலேச்சப் பிரபு மூலத்தில் தனதான்ய சேர்க் கையும் புத்தியின் முதலில் விசனத்தைக் கொடுத்து மத்தியிலுங் கடைசியிலும் சௌக்யத்தைக் கொடுக்கும்.

இராகு 6-8-12-ல் பாபருடன் கூடினால் வெகு மூத்திர ரோகத்தால் தேக மிளைக்கும் சீதசுரவிஷம் நாலாமாறல் காச்சல் உபத்ரவம் கலகம் குன்மரோகமாம்.

இராகு துவிதிய சப்தமத்திலிருந்தாலும் அவர்களுடன் கூடினாலும் தாரக்கிலேசம் அபமிருத்துவாம் இதற்கு துர்க்காதேவி செபஞ் செய்யவும்.

கேது மகாதிசையில் குருபுத்தி மாதம்-11 நாள்-6

இதற்குப் பலன்

குருகேந்திர கோணலாபத்தில் ஸ்வக்ஷேத்ரனாய் இலக்கினாதிபதியுடன் தரும கருமாதிகளுடன் கூடி யிருந்தால் தனதான்ய சம்பத்தும் குதிரை பல்லக்கு புத்ரமித்ர சோபனாதிகள் சந்தோஷம் புண்ய தீர்த்தலாபம் இஷ்ட தேவதாப் பிரார்த்தனை இராசப்ரசாதம் நூதன பிரபுக்கள் தரிசனமும் இராச சல்லாபமுமாம்.

குரு 6-8-12-ல் திசாநாதனுங் கூடி நிசமானால் சோராக்னி ரணபயம் கிலேசம் ஸ்தான பிரஷ்டம் சகோதர நாசமாம்.

குரு திசாநாதனுக்கு கேந்திர திரிகோணலாபத்தில் சுபருடன் கூடினால் விசித்திரமான பூடணமும் வாகனம் பூமிலாபம் சந்தன புட்பம் ஆடையாபரணாலங்காரம் தூரதேசப் பிரயாணமுமாம்.

குரு திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் வியாகூலம் கலகம் பீடை அன்னதுவேஷமாம்.

குரு துவிதிய சப்தமாதிகளுடன் கூடினால் அபமிருத்துவாம் இதற்கு சொர்னதானஞ் செய்யவும்.

கேது மகாதிசையில் சனிபுக்தி வருஷம்-1 மாதம்-1 நாள்-9

இதற்குப் பலன்

சனி கேந்திர கோணத்திலிருந்தால் இராசானுக்கிரகம் தன்னுடைய பிரபுவினால் வாகனபூஷண லாபமுண்டாம்.

சனி 6-8-12-லிருந்தால் மனஸ்தாபம் காரியவிக்னம் ஆலசியம் பிதுர்மாதுர் ஆனியுமாம்.

சனி துவிதிய சப்தமாதிகளுடன் கூடினால் அபமிருத்துவாம் கறுப்பு எருமை தானஞ் செய்யவும்.

கேது மகாதிசையில் புதன்புத்தி மாதம்-11 நாள்-27

இதற்குப் பலன்

புதன் கேந்திர திரிகோண லாபத்தில் ஸ்வக்ஷேத்திரனாயிருந்தால் இராச்சியலாபம் மகாசுகம் புண்ய கதை புராண காவியக் கேள்வியும் பூமி புத்திரலாபம் வித்தியாலாபம் தனதான்ய விர்த்தியும் சுபசோபனாதிகளுமாம் தன்ம கன்மாதிகளுட னிருந்தால் பாக்கியவிர்த்தி சுகசௌக்யம் மாதுர் சௌக்கியமாம்.

6-8-12-ல் சனிவீட்டில் சனியுடனுவது பார்வை யாது பெற்றிருந்தால் இராசவிரோதம் அன்னிய வீட்டில் லாபம் வாகனம் தான்யத்திற்கு லயம்வரும் தெற்குத்திக்கில் பிரயாணம் போன விடத்தில் காரியங் கூடுதலும் முதலில் சௌக்கியம் மத்தியில் தனவருத்து அந்தியத்தில் விசனமாம்.

புதன் திசாநாதனுக்கு கேந்திர திரிகோணலாபத்தில் சுபருடன் கூடினுல் சுபபலனுய் வாகனம் பூடணலாபமுண்டாம் தேகாரோக்யம் வீட்டில் சுபசோபனம் இலட்சுமி விலாசம்.

புதன் திசாநாதனுக்கு 6-8-12-லிருந்தால் கஷ்டம் தாரம் புத்திராளுக்குப் பீடை அபகீர்த்தியுமாம்.

புதன் துவிதிய சப்தமாதிகளுடன் கூடியிருந்தால் அபமிருத்து தோஷமுண்டாம் இதற்குப் பிராமண போசனஞ் செய்யவும்

கேதுமகாதிசை முற்றிற்று.

---

## சுக்கிர மகாதிசை வருடம்-20

### இதற்குப் பலன்

புத்ரருண்டாம் தனபாக்கிய ஸ்திரீகளுண்டாம் நல்ல சுகந்த பரிமளங்கள் பூஷணங்கள் வாகனங்களும் கீர்த்திப் பிரதிஷ்டையுமாம்.

சுக்கிரன் உச்சத்திலிருந்து அம்சையில் நீசனுயிருந்தால் சத்கன்மங்கள் முதலாகியதும் அர்த்த மில்லாமல் தரித்திரமாய் கஷ்டப்படுவன்.

சுக்கிரன் நீசனுயிருந்து அம்சையில் பரம உச்சனு யிருந்தால் வியாபாரபலிதம் சகலமுங் கிடைக்கும்.

சுக்கிரன் ஸ்வக்ஷேத்திரனுய் மூலத்திரிகோணத்திலாவது இருந்தால் சுபபலத்தைக் கொடுத்து இராசயோகமாய் தேசாந்திர அயிஸ்வரிய சம்பத்தும் நவரத்னுதி லாபங்களுமுண்டாம்.

சுக்கிரன் தனலாபத்திலிருந்தாலும் அல்லது சந்திரனுக்கு தனலாபத்திலிருந்தாலும் நிதி நிக்ஷேபலாபம் கோடி கன்னிகா தானம் தடாக தன்மங்கள் தேவாலயங்களுக்கு உச்சவாதி செய்து வைக்கிறதும் கேளிக்கை முதலாகிய வாத்திய விநோதங்களுண்டாக்குகிறதும் குடைகள் வெண்சாமரங்களுடன் வெளியே புறப்படுகிறதுமாம்.

சுக்கிர மகாதிசையில் சுக்கிரபுத்தி வருஷம்-3, மாதம்-4

### இதற்குப் பலன்

சுக்கிரன் இலாப உச்சனு யிருந்தாலும் ஸ்வக்ஷேத்திர கேந்திர திரிகோணத்தி லிருந்தாலும் இராச்சியத்திற்கு அருளனுகிறதும் வாகனப் பிராப்தியும் யானை குதிரை பசுக்கள் இலாபமும் நித்திய இஷ்டான்ன போசனமும் அகண்ட மண்டலாதிபத்ய

இவன் பிறந்த ஆண்டில் கண்டம், 3-ல் வெதுப்பால், 5-ல் ஜலத்தால், 7-ல் எதிரியால், 9 ல் உயரத்திலிருந்து விழுவதால், 5-ல் நாற்கால் மிருகத்தால், 16-ல் விஷத்தால், 18-ல் நெருப்பால், 23-ல் மருந்தீட்டால், 32-ல் சுழல்வாதத்தால், 55-ல் கள்ளரால், 57-ல் நீரால், 60-ல் வயிற்றுக்கடுப்பால், 65-ல் நீர்பாட்டால், 69-ல் நோயால்.

இவை கடந்தால் 86-வயது சென்று மாசிமாதம் பூர்வபட்சம் நவமியும் ஞாயிற்றுக்கிழமையும் பிறந்த உரோகணிநாள் உதித்து 7-நாழிகையில் சுரத்தால் மரணம்.

இவை கடந்தால் 90-வயது சென்று வைகாசி மாதம் அமரபட்சம் திங்கட்கிழமை பிறந்து அஸ்த நட்சத்திரம் உதித்து 7-நாழிகை சென்று ஜன்னிவாத வயிற்றுநோயால் மரணம்.

இவனுக்கு

ஆதித்தனுதயமாகில் இராஜபுருஷன்.
சந்திரனுதயமாகில் ஜீவாந்திரமாளுவன்.
செவ்வாயுதயமாகில் கள்வனுவன் கோபமுடையோன்.
புதனுதயமாகில் பண்டிதனுவன்.
வியாழமுதயமாகில் மந்திரியும் வித்துவானுமாவன்.
வெள்ளியுதயமாகில் அறிவுடையோன், சிரசு வலிக்கும்.
சனியுதயமாகில் கள்ளனுவன்.
இராகு உதயமாகில் முடவனும், மிடியனுமாவன்.
கேது உதயமாகில விஷகாரியம், துஷ்டனுமாவன்.
இந்நாளில் வியாழங்கூடில் விஷயோகம்.

இந்நாளில் பூஞ்சோலை வைக்க, தொட்டி கட்ட, நமஸ்காரம் பண்ண, அன்னப் பிராசனம் செய்ய, கிணறு வெட்ட, புதிய துண்ண, கோடியுடுக்க நன்று.

இந்நாள் முதற்காலில் நெல்விதைக்க நன்று.

இந்நாளில் மாதம் பிறக்கில் அகந்தாழும், சுரந் தோன்றில் ஆறுநாளில் வீடும், விடாதிருந்தால் இந்நாளில் அடுத்த விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் தேவதையை நோக்கி நெய்யால் ஓமஞ்செய்து இரத்தம் கந்தம் புஷ்பம் பலியிடவும்.

இந்நாளில் பிறந்தவன் பிரயாணம் போவதாக யிருந்தால் பாலுஞ் சோறும் புசித்துப் போகவும்.

உரோகணியின் பலன் முற்றும்.

---

## மிருகசீரிட நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

வே-வோ-கா-கி-மிருகசீரிடம்

இந்நாளின் பலன்

திருந்தியநடையனுகுந் தேசம்போய்த்திரியவல்லன்
அருந்தவத்தோர்க்குநல்ல னுயுதம்பிடிக்கவல்லன்
இருந்துபூசைசெய்து நீருகந்தாட வல்லன்
வருந்தியேகருமஞ்செய்வன் மான்றலை நாளினனே.

இந்த நட்சத்திரம் மூன்று தேங்காய் கண்போலிருக்கும், இது உச்சமானல் கன்னியில் 4-நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி சாரைப்பாம்பு, பட்சி-கானுங்கோழி, விருட்சம்-கருங்காலி, கணம்-தெய்வம், நாள்-பெண், தெய்வம்-சந்திரன்.

இந்நாளினுக்கு 4-நாழிகைக்குமேல் விஷம் 4-நாழிகையும் நிற்தும் கார்த்திகை மாதம் சூனியம்

இந்நாளினுக்கு வெற்றி பரந்திருக்தம், மூக்கு உயர்ந்திருக்கும், உடம்பு பூரித்திருக்கும், கல்வியுடையவன் அழகன் இவனது மனதை ஒருவரால் அளவிடப்போகாது. தெய்வ பக்தியுடையவன், பாக்கு வெற்றிலைப்பிரியன், பாட்டுக்கூத்தில் விருப்பமுடையவன், பூசை முடிக்கவல்லன், பலருடன் வாழ இச்சையுடையவன், ஸ்திரீகள் முன் கோபமுடையவன் கோபித்தபொழுதே ஆறுவான் இராஜாபிமன்னன். இவனுக்கு ராசி ரிஷபம்.

முதற்கால் சிங்காதித்த பலன்

நீளியசெய்யுஞ்சால நிபுணனுய்நஞ்சைசெய்யும்
மாளிகைமலையில்வாழ மன்னரால்மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கண்ணியவன்பன் வலக்கையின்மருவுவேலன்
காளிசேர்வடிவுபேணுங் கதிரவன் காலினனே.

இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன் - 9, சிங்காதித்தன் - 5, கடகசந்திரன் - 21

கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, ஆக வயது-100.

இரண்டாங்கால் மிதுனபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டாம்
மாதமானுருவமாகு வனப்பொறுக்கரியவொண்ணுன்
ருதுசேர்விழியார்தம்மேற் றன்பொருன்சாரநில்லான்
மாதுசேர்வலக்கைவேலன் மாலினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷசெவ்வாய்-7, தனுசுவியாழன்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-19, ஆக வயது-103.

மூன்ருங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்லன் சேயிழையாரைப்பேணும்
ஒள்ளியகண்ணில்வல்லோ னென்பொருள்சாரநில்லான்
பள்ளியும்பலனும்கற்கும் பாக்கியமுடையோனுகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-3 சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-1, கன்னி புதன்-9, துலாம் வெள்ளி 16, விருச்சிகசெவ்வாய்-7, மீனவியாகம்-10, கும்பசனி-4, ஆக வயது-85.

நான்காம்கால் மேஷச்செவ்வாயின் பலன்

குறுகியசருவமெய்யன் குரளைசேர்குதலைவாயன்
மறுகியமனத்தன்பெண்மேல் வன்பொருள்சாரநில்லான்
முறுகியகொடுமைசெய்வன் முதுகிலேமருவுண்டென்றும்
தெரிதருங்காதல்பேணுஞ் சேயினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

தனுசு வியாழம் - 10, விருச்சிகச்செவ்வாய் - 7, துலாம் வெள்ளி - 16, கன்னிபுதன் - 9, சிங்காதித்தன் - 5, கடகசந்திரன்-21, மிதுனபுதன் - 9, ரிஷபவெள்ளி - 16, மேஷச்செவ்வாய்-7, ஆக வயது 100.

இனி மகாதிசை

செவ்வாய்-7, இராகு-18, இராஜா-16, சனி-19, புதன்-10, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-6, சந்திரன்-7, ஆக வயது 110.

இவன் பிறந்த ஆண்டில் செவ்வாயின் திசையால் கண்டம், 3-ல் தண்ணீரால், 8-ல் சிலந்தியால், நாற்கால் மிருகத்தால், 10-ல் வெதுப்பால், 19-ல் கருவியால், 21-ல் வயிற்றுநோயால், 24-ல் மரத்தால், 33-ல் வயிற்று நஞ்சால், 37-ல் உறன் முறை யாரால், அம்மையால் கண்டம்.

இவை கடந்தால் ஆனிமாதம் பூர்வபட்சம் ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை சித்திரை நட்சத்திரம் அஸ்தமித்து 5-நாழிகையில் மரணம்.

இவை கடந்தால் 85-வயது சென்று அமரபட்சம் ஞாயிற்றுக்கிழமை ஏகாதசி சித்திரை நட்சத்திரம் பிறந்தநாள் மரணம்.

இவை கடந்தால் 86-வயது சென்று வெள்ளிக்கிழமையும் உத்திர நட்சத்திரமும் அஸ்தமித்து 15-நாழிகையில் பித்தங் கரித்து மரணம்.

இவனுக்கு

சூரியனுதயமாகில் உடல் வெளுத்திருக்கும்.
சந்திரனுதயமாகில் சீமானுவான்.
செவ்வாயுதயமாகில் மிடியன்.
புதனுதயமாகில் புத்திமான்.
குருவுதயமாகில் குணவான்.
வெள்ளியுதயமாகில் வேளான்மைசெய்வான்.
சனியுதயமாகில் தானியங்கட்டும்.
இராகு உதயமாகில் வியாபாரம்.
கேது உதயமாகில் கள்ளன்.
இந்நாள் விவாகம்பண்ண, பெண்திரள நன்று.
திங்கள் கூடில் அமிர்தயோகம்.
குரு கூடில் மரணயோகம்.

இந்நாளில் சுரந்தோன்றில் 10-நாளில் விடும், விடாதிருந்தால் கருங்காலி மரத்தடியில் நீர்க்கரையில் தேவதையை நோக்கி வேதமந்திரத்தால் பலியிடவும்.

மிருகசீரிடத்தின் பலன் முற்றும்.

---

## திருவாதிரை நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

கூ-கா-ஙா-சா-திருவாதிரை

இதற்கு இராசி மிதுனம்

இதன் பலன்

பண்டிதன்பரியுமாள்வன் பலருரையறிந்துசொல்வன்
கண்டவர்தம்மைப்பேணுங் கடுகியசெல்வனுகும்
வண்டாய்திரிந்துவாத வழக்கறிந்துரைக்கவல்லவன்
கொண்டல்சேர்குழலினேடே குணந்தருமிதுனந்தானே.

இந்நாளினுக்கு

தெய்வம்-உருத்திரன், யோனி-நாய், பட்சி-அன்றில், விருக்ஷம்–கருங்காலி, கணம்-மனிதன், நட்சத்திரம்-மீன் கண் போலிருக்கும், இது உச்சமானுல் கன்னியில் ஒண்ணரைநாழிகை செல்லும், 21-நாழிகைக்குமேல் 4–நாழிகை விஷம், தை மாதம் சூனியம்.

(இந்நாளின் குணம் கிரந்தாந்தரங்களிலே சொல்லப்பட்டன.)

இன்னுனுக்குக் கண்செவ்வரி பறந்திருக்கும், கடுநடையுடையவன், மூக்கு உயர்ந்திருக்கும், உறவுடையோன், மார்பு அகன்றிருக்கும், கோபமுடையோன், உறவினன், நித்திரைக் கடியன், ஸ்திரீ கண்ணன், அழிக்கவல்லவன், மறுத்துரைப்பான், இவனுக்கு நாற்கால் சீவவதை உண்டாம்.

திருவாதிரை முதற்கால் மீனகுரு

இவன் புலன்

மாந்தளிர்போலுமேனி மனதொத்துகலைகள்கற்கு
மேந்தியகுலத்திற்கெல்லா மிசைந்ததோர்திருவுமாவன்
காய்ந்தபின்னடங்கமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுகுஞ் செய்யபொற்காலினுனே.

இதற்குக் காலசக்கரம்

மீனகுரு-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுர்குரு-10, விருச்சிககுஜன்-7, துலாசுக்கிரன்-16, கன்னியாபுதன்-9, மாதித்தன்-5, கடகசந்திரன்-21 ... 86

இரண்டாங்கால் கும்பசனி

இதன் பலன்

ஊனமதுடையனுகு முறவொடுபழியுநேரான்
மேனியுமுருவநல்லன் மிக்கதோரறிவுமில்லான்
மானமதுடையோனுகு மனமபொறுக்கரியான்மேலும்
கானகந்திரிந்துவாழுங் காரியங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

மிதுன்புதன்-9, ரிஷப சுக்கிரன்-16, மேஷகுஜன்-7, ரிஷப சுக்கிரன்-16, ஆக வயது 48.

மூன்ருங்கால் மகரசனி

இதன் பலன்

ஆரையுமறிந்துபேசு மரும்பொருளறிவனுதஞ்
சீரியசெய்யவேண்டான் சிதைவதைசெய்வதல்லான்
மாரியிற்பொய்யேபேசு மனம்பொறுக்கறியான்மேலும்
காரியக்கிலேசனுகுங் கரியனங்கிசத்தினுனே.

மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னி புதன்-9, துலாசுக்கிரன்-16, விருச்சிககுஜன்-7, மீன குரு-10, கும்பசனி-6, மகரசனி-4, ஆக வயது 87.

நாலாங்கால் தனூர்குரு

இதன் பலன்

சிறிதேயுண்ணும்பொய்சொல்லான் சிவந்தகண்ணன் சிறு குழவ, னறிவுமிகவாம்பெருங்குணத்தா னடைந்தோர்க்கன்ப னழகியனும், பொறிசேர்மஞ்ஞைமனையாளைப் பொருளென் றெண்ணுன்புகழ்விளங்கும், வெறிசேர் கூந்தன்மடமானே வியாழக்காலிற்பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

தனூர்குரு-10, விருச்சிககுஜன்-7, துலாசுக்கிரன்-16, கன்னியாபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுன புதன்-9, ரிஷபசுக்கிரன்-16, மேஷகுஜன்-7, ஆக வயது 100.

இனி மகாதிசை

இராகு-10, குரு-16, புதன்-17, கேது-31, சுக்கிரன்-20, சூரியன்-9, சந்திரன்-10, குஜன்-7, ஆக வயது 120.

## இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

இராகு திசையிற் கண்டம், அன்றியும், 3-ல் வெறுப்பால், 7-ல் வைசூரியால், 12-ல் நாற்கால் மிருகத்தால், 16-ல் விஷத்தால், 18-ல் உயரமேறி வீழ்தலால், 20-ல் பெண்ணால், மருந்தினுல், 33-ல் கள்ளரால், 35-ல்இராஜபடையால், 40-ல் சுழல்வாதத்தால், 47-ல் வயிற்று வியாதியால், 50-ல் மூல வியாதியால், 55-ல் வயிற்றுக்கடுப்பால், 60-ல் வயிற்றுபேதியால் கண்டம்.

இவை கடந்தால் 80-வயது சென்று ஆனிமாதம் பூர்வபட்சம் அஷ்டமியும் ஞாயிற்றுக்கிழமையும் கூடிய அன்று சுவாதி உதித்து 3-நாழிகையில் இளைப்புத்தோன்றி மரணமாம்.

இது கடந்தால் 88-வயது சென்று தைமாதம் பூர்வபட்சம் நவமியில் குருவாரமுங்கூடிய அன்று திருவாதிரை உதித்து 1-நாழிகையில் இளைப்பு தோன்றி மரணமாம்.

### இவனுக்கு

சூரியன் உதயமாகில் மிடியன் திருடன்.

சந்திரன் உதயமாகில் பயிர் பலிதம்.

குஜன் உதயமாகில் கோபியாவான்

புதன் உதயமாகில் பண்டிதன், பிதாவுக்கு நல்லவன்.

குரு உதயமாகில் வியாபாரி, கல்வியுடையவன்.

சுக்கிரன் உதயமாகில் கள்ளன், வியாபாரி.

இராகு உதயமாகில் கலகப்பிரியன்.

கேது உதயமாகில் விரோதி, விஷபுத்தியுடையவன்.

இந்நாளில் குஜன் கூடில் மிருத்தியோகம்.

குருகூடில் சுபயோகம்.

மேற்படி யோகங்களில் பூஜாரம்பம் வித்தியாரம்பம் இவை இவை செய்ய நன்று.

பெண் திரளில் நோய்.

மாதம் பிறக்கில் அகந்தாமும்.

சுரந்தோன்றில் ஐந்து நாழிகையில் விடும்.

விடாதிருந்தால் தேனும் நெய்யும் கலந்து அரசமரத்தடியில் தேவதையை நோக்கிப் பலியிட்டு ஓமம் பண்ணவும்.

இந்நாளில் வானத்தில் வில்லிடினும் வெள்ளை மேகம் பரவினும் மழை பெய்யும். கண்டரஜ்ஜு.

திருவாதிரையின் பலன் முற்றும்.

---

## புனர்பூச நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

கே-கோ-ஹா-ஹி-புனர்பூசம்

இந்நாளின் பலன்

நெய்யொடுபாலுங்கூடு நிரம்பியகுணத்தனுகும்
வெய்யசொல்லுடையனுகும் வேதியர்தம்மைப்பேணுங்
கையதுகெடியனுகுங் கடுநடையுடையனுகும்
பொய்யுரையொன்றுஞ்சொல்லான் புணர்பூசநாளினனே.

இந்த நட்சத்திரம் 9-மீன் ஓடம்போலிருக்கும்

இந்நாளினுக்கு தெய்வம்-அக்கினி, யோனி-பெண்பூனை, பட்சி-அன்னம், விருட்சம்-புன்னைமரம், கணம்-தெய்வம், புதன்கிழமை ஜென்மவாரம் பொருத்தம்-7, கிழக்குவாசல் விடுவது, நாள் - ஆண், பூதம் - அப்பு, ஜாதி - பிராமணன், யோகினி-மயேஸ்வரி.

இந்நாளினுக்கு 30-நாழிகைக்குமேல் 4-நாழிகை

இந்நாள் ஜெபதபஞ்செய்ய, திருவெழுத்திட, நமஸ்காரஞ் செய்ய, அபிஷேகம்பண்ண, யானை குதிரை யேற, பொன் பூண, கோடி யுடுக்க, உபநயனஞ்செய்ய, பூஞ்சோலைவைக்க, மருந்து தின்ன, வியாபாரம் செய்ய, குடிபோக நன்று .

இந்நாளில் பிறந்தவன் புத்தியுடையவன், காலுங்கையும் உறத்திருக்கும், கல்வியுடையவன் நெற்றி உயர்ந்திருக்கும். அடக்கமுடையவன், ஸ்திரீகட்குப் பிரியன், அழகுடையவன். வார்த்தையில் வல்லவன் மெதுவான நடையுடையவன், புத்தி விசாரணை யுடையவன், பொய்பொருன், பொருளுரைப்பான், கைகள் கமலம்போலிருக்கும்.

இந்நாளிற் பிறந்தவனுக்கு முதற்கால் மேஷச்செவ்வாய் இதன் பலன்

குருகியவுருவமெய்யன் குறளைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன்பெண்பேல் வன்பொருள்சாரநில்லான்
முருகியகொடுமைசெய்வன் முதுகிலேசுழியுமுண்டாஞ்
செரிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னியா புதன்-9, துலாம் வெள்ளி-19, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, ஆக வயது-103.

இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்லன் சேயிழையாரைப்பேணு
மெள்ளியகண்ணில்வெள்ளா னென்பொருள்கள்வனுகும்
பள்ளியும்பலவுங்கற்கும் பாக்கியமுடையனுகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே.

இதற்குக் காலசக்கரம்

மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிக செவ்வாய்-7, துலாம்வெள்ளி-19, கன்னிபுதன்-6, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-6, ஆக வயது 82.

மூன்ருங்கால் மிதுனபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமானுருவமாடி மனம்பொறுக்கரியவொண்ணுன்
ருதுசேர்குழலினர்பாற் றன்பொருள்சாரநில்லான்
மீதுரையுரைக்கவல்லன் மிதுனவங்கிசத்தினனே.

இதற்குக் காலச்சக்கரம்

ரிஷபவெள்ளி-9, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4- தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன் -9, ஆக வயது 76.

நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுகு
மலைதரும்வல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்குகற்கும் கடிமதக்காளையாகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-4, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகர சனி-4, கும்பசனி-9, மீனவியாழம்-10, ஆக வயது-74.

இனி மகாதிசை

இராஜா-19, புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-6, சந்திரன்10, செவ்வாய்-2, இராகு-17, ஆக வயது-120.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் வலிப்பால், 5-ல் வயிற்று வியாதியால், 6-ஆயுதத்தால், 11-ல் விஷத்தால், 15-ல் சத்துருவால், 25-ல் வைசூரியால், 30-ல் அரையாப்பால், 39-ல் வாதத்தால், 40-ல் இராஜாவால், 55-ல் அக்கினி மகோதரத்தால், 68-ல் சிலேத்துமத்தால் கண்டம்.

இவை கடந்தால் 80-வயது சென்று வைகாசிமாதம் அமர பட்சம் பஞ்சமி வெள்ளிக்கிழமை புனர்பூசம் 5-உதித்து 5-நாழி கையில் வீக்கங்கண்டு மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் கோளனும் மிடியனுமாவான்.

சந்திரன் உதயமானால் குணவானும் தனவானுமாவான்.

செவ்வாய் உதயமாகில் கோபியும் பண்டிதனுமாவான்.

புதன் உதயமாகில் வித்தையுடையவன்.

குரு உதயமாகில் புத்திரருள்ளவன்.

வெள்ளி உதயமாகில் ஒற்றைக்கண்ணன்.

சனி உதயமாகில் கள்ளன்.

இராகு உதயமாகில் கோள்கேளாதவன்.

கேது உதயமாகில் குருடன், பாடவல்லவன்.

இந்நாளில் மாதம் பிறக்கில் அகந்தாழும்.

பெண் திரளில் நன்மை.

இந்நாளில் சுரம்தோன்றில் 20-நாளில் விடும், விடாதிருந் தால் நெய்யும் பாலும் கலந்து தேவதையை நோக்கி ஓமம் பண்ணவும்.

இந்நாளில் வழி போக வேண்டில் பச்சரிசியும் பாலும் தின்று போவது. நாபிரஜ்ஜு.

புனர்பூச நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## பூச நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

ஹு-ஹெ-ஹே-டா-பூசம்

தேசமேபுகழவாழுஞ் சிட்டரேயறிந்துகூடும்
வாசமாமலையமுண்டாம் மதியுடன்கல்விசேரும்
வாசமாற்குழலிமாரை மனதுடன்சேர்ந்துவாழும்
போசனமினிமையாவான் பூசநாட்டோன்றினனே.

பூசம்-முதற்கால் கடகசந்திரன் பலன்

இதன் பலன்

சொல்லுநற்சொல்லுஞ்சொல்லுந் துக்கமுமெளுகும்பார்க்கும்
வெல்லுவன்பகைவர்தம்மை விரும்பியேகருமஞ்செய்ய
நல்லதாய்மெல்லவாழு நன்னுலாளைப்பேணு
மெல்லியல்கோதைமாதே யலவனும்ராசியாமே.

இந்த நட்சத்திரம் புடம்பூப்போலிருக்கும்

இந்நாளினுக்கு யோனி-ஆட்டுக்கடா, பட்சி-நீர்க்காக்கை, விருட்சம் - அரசு, கணம் - தெய்வம், திங்கள் - சென்மவாரம், பொருத்தம்-6, கிழக்குவாசல்-விடுவது, நாள்-ஆண், தெய்வம் ஆதித்தன், பூதம்-பிருதிவி, ஜாதி-அகஸ்தியன், யோகினி-மந்தாங்கி.

இந்நாளிற்கு 20-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்

இந்நாளில் பிறந்தவன் சவுந்தரியம் பேராளன், மாதாவுக்கு நல்லவன், ஒழுக்கமுடையவன், வழக்கறிந்துரைப்பான் கோபி, காலும் கையும் மெல்லியதா யிருக்கும், கருத்துடையவன், அரையிலும் முகத்திலும் மருவுண்டு தனமுடையவன், நெடியன்.

இந்நாள் வித்யாரம்பஞ்செய்ய, குடிபோக காதுகுத்த விரைதெளிக்க அகம்புதுக்க கோடியுடுக்க ஆபரணம் பூண பெண்கொள்ள நன்று, பெண்திரளில் பிள்ளையுண்டாம்.

மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரம்தோன்றில் 4-நாழிகையில் விடும்; விடாதிருந்தால் தெய்வமந்திரத்தால் ஓமஞ் செய்து விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் சோறு கந்தபுஷ்பம் பலியிடவும்.

இந்நாளில் பிரதேசம் போக நேரிட்டால் நெய் குடித்துப் போகவும்.

முதற்கால் சிங்காதித்தன் பலன்

நீளியசெய்யசாவ ணிபுணனுயழியச்செய்ய
மாளிகைமனையில்வாழ்வன் மன்னரான் மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கண்ணியன்பன் வலக்கையின்மருவுவேலான்
காளிபேர்வடிவுபேணுங் கதிரவன்காலினாலே.

இதற்குக் காலசக்கரம்

விருச்சிக செவ்வாய்-7, துலாம்வெள்ளி-13, கன்னிபுதன்-7, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-9, ரிஷப வெள்ளி-16, மேஷச் செவ்வாய்-7, மீனம்வியாழன்-15, ஆக வயது 100.

இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதராலருளுமுண்டாம்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோளிலேதிசையுந்தோற்று
மந்திரம்பொய்யுஞ்சொல்லு மறைப்பொருணெருங்கிவாழும்
புந்தியிற்பெரியோனாகும் புதனினங்கிசத்தினாலே.

இதற்குக் காலசக்கரம்

கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-11, மிதுனபுதன்-9, ஆக வயது-85.

மூன்றாங்கால் துலாம்வெள்ளியின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமருவுண்டென்றுஞ்
சீர்தருமுத்தியேனுஞ் சேய்தருங்கொடுங்கண்ணாள
னாதரவுடையனாகு மறிவுடனன்றிகற்குஞ்
சார்வதுவாதர்தம்மால் தருபுகர்காலினாலே.

இதற்குக் காலசக்கரம்

துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-11, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-19, கன்னிபுதன்-9, ஆக வயது-87.

## நாலாங்கால் விருச்சிக செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன் னுடையனுகும்
பட்டயமணிந்ததோளான் படைக்கெலா ந்தலைவனுகுஞ்
சிட்டரைசேர்ந்து வாழுஞ் சிறுகுறியாளனுகும்
வெட்டெனவொன்றுமஞ்சா னெரிபிணங்கிசத்திருனே.

### இதற்குக் காலச்சக்கரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-9, ரிஷப வெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, ஆக வயது-86.

### இனி மகாதிசை

சனி-19, புதன்-17, கேது-10, சுக்கிரன்-21, சூரியன்-7, சந்திரன்-20, செவ்வாய்-7, ராஜா-19, ஆக வயது-120.

### இவன் பிறந்தவாண்டில் கண்டம்

3-ல் கருவியால், 5-ல் விஷத்தால், 7-ல் வைசூரியால், 12-ல் கிரந்தியால், 16-ல் சுரத்தால், 25-ல் சத்துருவால், 36-ல் கள்ளரால் 46-ல் வாதத்தால், 59-ல் நெருப்பால், 65-ல் அரசர் படையால்.

இவை கடந்தால் 80-வயது சென்று ஐப்பசி மாதம் பூர்வ பட்சம் திங்கட்கிழமை ஏகாதசி சதய நட்சத்திரம் உதித்து நாலு நாழிகையில் வயிற்று நோயால் மரணம்.

இவை கடந்தால் கார்த்திகைமாதம் வியாழக்கிழமை பூர்வ பக்ஷம் சதுர்த்தி, அனுஷநாள் உதித்து 20-நாழிகைக்கு மேல் பெருவயிற்ருல் மரணம்.

### இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் சிவந்தமேனி யுடையவன்.
சந்திரன் உதயமாகில் தனவான்.
செவ்வாய் உதயமாகில் பண்டிதன், முட்டிக்காலன்.
புதன் உதயமாகில் வித்துவானுவான்.
வியாழம் உதயமாகில் மந்திரியாவான்.
வெள்ளி உதயமாகில் வாகனமுடையவன்.
சனி உதயமாகில் கலகன்.

ராகு உதயமாகில் கைராசிக்காரன்
கேது உதயமாகில் சொத்துப்போம், விஷக்காரனுவான்.

சங்கரஜ்ஜு

பூசத்தின் பலன் முற்றும்.

---

## ஆயிலிய நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

டி-டு-டெ-டோ-ஆயிலியம்

கடுகியேநடக்கவல்லன் காரியமனத்தனுகுஞ்
சடுதியிலடுத்துப்பேசுந் தந்தைதாய்தமரைப்பேணும்
வடுகரைபேசவல்லன் வருந்தியேயிருந்துவாழு
மடுத்தவர்க்கன்பனுகு மாயில்யநாளினுனே.

இந்த நட்சத்திரம் 4—மீன் அம்மிபோல யிருக்கும்.

இது உச்சமாகில் துலாத்தில் 4-நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி-கடுவன்பூனை பட்சி-விச்சுளி, விருட்சம்-புன்னைமரம், கணம்-ராக்ஷதன், பொருத்தம்-6, வடக்கு கிழக்கு வாசல்விடுவது, தெய்வம்-வாயு, சாதி-வைணவன், கோத்திரம்-வைசியன், பூதம்-அப்பு.

இந்நாளிற்கு 32-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம் சித்திரை மாசம் சூனியம்.

இந்நாளில் கரும்புவைக்க வெற்றிலைநட உத்தமம்.

பெண் திரளில் விதவையாவாள்.

மாதம்பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரந்தோன்றில் எட்டு நாழிகையில் விடும், விடாதிருந்தால் நெல் வரகு ஆலங்கொழுந்து நெய்யுங் கலந்து ஓமஞ்செய்து அடுத்த விருட்சத்தடியில் பலியிடவும்.

### ஆயிலிய முதற்கால் தனுசு வியாழத்தின் பலன்

சிறிதொன்றும் பொங்கல்சொல்வான் சிவந்தகண்ணன் சிறுகுழலா, னறிவுமிகவே பெருங்குணத்தா னடைந்தோர்க்கன்பனழகியனும், பொருள்சேர் மைந்தன்மனையாளைப் பொருளென்றெண்ணுன் புகழ்விளங்கும், விரிசேர் கூந்தன் வடமாலே வில்லின்காலிற் பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-8, ரிஷபவெள்ளி-13, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னியாபுதன்-8, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, ஆக வயது 100.

இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஆரையுமறிந்துபேசு மரும்பொருளம்பன்செட்டு
சீரியேசெய்யவேண்டாஞ் சிந்தையில்செய்வதெல்லா
மாரியேபொய்கள்சொல்வான் மனம்பொறுக்கரியவொண்ணுன்
காரியகிலேசனுகுங் கரியினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிக செவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, கடகசந்திரன்-1, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-9, ஆக வயது 85.

மூன்ருங்கால் கும்பசனியின் பலன்

ஊனமனதுடையனுகு முறவொடுபழியுமேருன்
மேனியுமுருவுநல்லன் மிக்கதோரறிவுமில்லை
வீனமேயொன்றுஞ்சார னிடரதுபுரியவல்லன்
கானகந்திரிந்துவாழுங் கரியினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷச் செவ்வாய்-4, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன் 6 ஆக வயது 83.

நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

மாந்துளிர்போலுமேனி மதிமுகமருவுண்டென்று
மேந்தியகுலத்துக்கெல்லா மிசைந்தொருகுருவுமாவான்
காய்ந்தபினடக்கமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுகுஞ் செய்யபொற்காலினுனே.

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-2, துலாம் வெள்ளி-16, விருச்சிகச்செவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகர சனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, ஆக வயது 86.

இனி மகாதிசை

புதன்-17, கேது-7, சுக்கிரன்-10, சூரியன்-6, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-18, ராஜா-16, சனி-19, ஆக வயது 130.

இந்நாளில் பிறந்தவனுக்கு புருவம் நெருங்கி உயர்ந்திருக்கும், சுகந்தன், தெய்வபக்தி யுடையவன், கோபி, வீண்சொல் பொருன், பெருமையில்லான், உருக்கமுடையவன், வலுமை யாய்ப் பேசுவான், அடவியடைந்து வாழ்வன், பகையாளி யுடனே எதிரான், எல்லாருக்குங் கொடுக்க வேண்டி யிருப்பான்.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் சுரத்தால், 5-ல் வியாதியால், 8-ல் மிருகத்தால் 14-ல் வைசூரியால், 16-ல் நீரால், 25-ல் விஷத்தால், 41-ல் ஆயுதத்தால், 45-ல் மிருகத்தால், 55-ல் சுழல் வாதத்தால், 57-ல் உதிர வியாதியால், 64-ல் நீர்ப்பாட்டால், 68-ல் வாதத்தால், 76-ல் அக்கினியால்.

இவை கடந்தால் 81-வயது சென்று ஐப்பசிமாதம் ஞாயிற்றுக்கிழமை பூர்வபட்சம் ஏகாதசி ஏழு நாழிகையில் பித்தங் கதித்து அஸ்தமித்து 3-நாழிகைக்குமேல் மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் குணக்கேடன், மிடியன்.

சந்திரன் உதயமாகில் தனவான்.

செவ்வாய் உதயமாகில் கோபி.

புதன் உதயமாகில் விசாரமுடையவன், வித்துவான்.

வியாழம் உதயமாகில் ராஜபுருஷன்.

வெள்ளி உதயமாகில் துஷ்டன்.

சனி உதயமாகில் கலகன்.

இராகு உதயமாகில் கெடுதியுள்ளவன்.

கேது உதயமாகில் மூடவன், குருடன்.

பாதரஜ்ஜு

ஆயிலிய நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## மக நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

மா-மீ-மு-மே-மகம்

இந்நாளின் பலன்

தந்தைதாய்மிகவும்பேணுஞ் சார்பொடுபுவியுஞ்சேருஞ்
சிந்தைநூன்மிகவுங்கற் தஞ் தேசம்போய்த்திரியவல்லன்
வந்தனையுகந்துவாழு மணமதுமுடிக்கவல்லான்
மந்திரப்பொய்கள்சொல்வான் மகத்திலுடோன்றினனே.

இந்நாள்கொண்ட சிங்க பலன்

நிலைபெறத்திரிந்துவாழு நிறம்பிடுங்கல்விகற்கும்
வலியுளமத்தனுகும் வஞ்சகமொன்றுஞ்சொல்லான்
பலதனியுடையனுகும் பழிதனக்கஞ்சிவாழுஞ்
சிலையதுவல்லனுகுஞ் சிறப்புளசிங்கந்தானே.

இந்த நட்சத்திரம் 4-மீன் முடங்கள்போலிருக்கும்.

இது உச்சமாகில் விருச்சிகத்தில் 1¼-நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி-ஆணெலி, பட்சி-கழுகு, விருட்சம்-ஆலம், கணம்-ராக்ஷதன், ஞாயிற்றுக்கிழமை-சென்மவாரம், பொருத்தம்-11, கிழக்கு தெற்கு வாசல்விடுவது, நாள்-ஆண், தெய்வம்- சுப்பிரமணியர், பூதம் - அப்பு, ஜாதி - சூரியன், யோகினி-கௌமாரி.

இந்நாளில் சுரந்தோன்றில் 10-அல்லது 15-நாழிகையில் விடும். விடாதிருந்தால் 20-நாழிகையில் மரணம்.

இந்நாளினுக்கு 10-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம் ஆவணிமாதம் சூனியம்.

இந்நாளிற் பிறந்தவன் அழகுடையவன், தனமுடையவன், நீதி யுடையவன், ஸ்திரீகள்ளன், புளித்த பதார்த்தப் பிரியன், வலதுபக்கம் மருவுண்டு, பூசை முடிக்கவல்லவன், பெண்பிள்ளை மிகவுண்டு, பிறர் காரியத்தைப் பார்க்க அறிவுடையவன், இவனுக்குக் கீழ்வாய் வயிறு பொருந்தி யிருக்கும். சத்திய வாக்கியன்.

முதற்கால் மேஷச்செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன் னுடையனுகுஞ்
சிட்டரைத்தெரிந்துவாழுங் சிறுகுறியாளனுகும்
பட்டயமணிந்ததோளான் படைக்கெலாந்தலைவனுகு
மெட்டெனவெடுத்துப்பேசு மெரியினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன் 21, ஆக வயது-86.

இரண்டாங்கால் துலாம்வெள்ளியின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமருவுண்டென்றுஞ்
சீர்தருமுத்திபேணுஞ் சிறுகுறியாளனுகு
மாரையுமறிந்துகூறு மறிவொடுநன்றிகற்குஞ்
சார்வதுமாதர்தம்பாற் றரும்புகர்காலினுவன்.

இதற்குக் காலசக்கரம்

துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷசெவ்வாய்-16, ரிஷபவெள்ளி-16, ஆக வயது-83.

மூன்ருங்கால் கன்னிபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதர்களருளுமுண்டாஞ்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோளிலேதிசையுந்தோற்று
மந்திரப்பொய்கள்சொல்லான் மரும்பொருணெருங்கிவாழும்
பந்தியிற்பெரியோனுதும் புதனினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, ஆக வயது-85.

நாலாங்கால் கடகசந்திரன் பலன்

கலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுக
மலைதருவல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
பலகலைநன்றிகற்கும் பாக்கியமுடையனுக
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷசெவ்வாய்-7, ஆக வயது-100

இனி மகாதிசை

கேது-7, வெள்ளி-20, சூரியன்-9, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-18, ராஜா-16, புதன்-17, ஆக வயது-120

## இவன் பிறந்தவாண்டில் கண்டம்

3-ல் ஜலத்தால், 5-ல் விஷத்தால், 7-ல் வைசூரியால், 9-ல் மிருகத்தால், 15-ல் விஷத்தால், 20-ல் அரையாப்பால், 24-ல் வயிற்று வியாதியால், 40-ல் மிருகத்தால், 47-ல் நல்லபாம்பால், 50-ல் கள்ளரால், 56-ல் நெருப்பால், 80-ல் வயிற்று நோயால் கண்டம்.

இவை கடந்தால் 90-வயது சென்று ஆவணிமாதம் செவ்வாய்க்கிழமை அமரபட்சம் நவமி சோதிநாளுதித்து 2-நாழிகையில் சகல வியாதியால் மரணம்.

இவை கடந்தால் 90-வயது சென்று பங்குனிமாதம் ஞாயிற்றுக்கிழமை துவாதசி யுதித்து வயிற்றுவலியால் மரணம்.

### இவனுக்கு

சூரியன் உதயமாகில் கள்ளன்.

சந்திரனுதயமாகில் நன்மையுடையவன்.

செவ்வாயுதயமாகில் தேசாந்திரியாவான்.

புதனுதயமாகில் வித்தையுடையவன்.

வியாழமுதயமாகில் வேளாண்மை பலிக்கும்.

வெள்ளியுதயமாகில் வியாபாரி.

சனியுதயமாகில் யோகியாவான்.

இராகு உதயமாகில் உளைச்சலுடையவன்.

கேது உதயமாகில் விஷக்காரி துஷ்டன்.

இந்நாளில் போசனம் செய்ய மாடுகொள்ள விரை தெளிக்க நெற்போர் கட்ட சாந்தி பண்ண அகமெடுக்க கடன் கொடுக்க ஆகாது.

பெண் திரளில் மாதம் பிறக்குமுன்னே மரணம்.

மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்த நட்சத்திரத்தில் ஊர் பிரயாணம் போகவேண்டில் மானிறைச்சி தின்று போகவும்.

பாதரஜ்ஜு

மக நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## பூர நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

மோ-டா-டீ-டு-பூரம்

இந்நாளின் பலன்

வருந்தியேதேடவல்லன் வாணிபம்பலவுஞ்செய்யும்
விரும்பியேபலவுஞ்செய்யும் வெட்டெனப்பேசவல்லன்
சுரும்புசூழ்குழலினுரைச் சூட்சியாய்வெல்லவல்லன்
பொருந்தியேயுரைக்கவல்லன் பூரநாட்டோன்றினனே.

இந்த நட்சத்திரம் கட்டிற்கால்போ லிருக்கும்.

இது உச்சமானல் விருச்சிகத்தில் 4-நாழிகை செல்லும்.

இந்நாழிகைக்கு யோனி-பெண்ணெலி, பட்சி-பெண் கழுகு, விருட்சம்-பலாசு, கணம்-மனிதன், ஞாயிற்றுக்கிழமை-சென்ய வாரம், பொருத்தம்-10, கிழக்கு தெற்கு வாசல் விடுவது, நாள்-பெண், தெய்வம்-விஷ்ணு, பூதம் அப்பு, சாதி-அனுலோமன், கோத்திரம்-அகஸ்தியன், யோகினி-வராகி.

இந்நாளினுக்கு 33-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம் ஆவணி மாதம் சூனியம்.

இந்நாளிற் பிறந்தவன் அழகியன், கண் செவ்வரியோடி யிருக்கும், கல்வியுடையவன், விசனமுடையவன், நெடியன், கோபித்தவுடனே ஆறுவன், பலபேர் சொன்ன காரியத்தைச் செய்வன்.

பூரம் முதற்கால் சிங்காதித்தன் பலன்

தெளியசெய்யசால னிபுணனுய்க்கல்விகற்கு
மாளிகைமலையில்வாழு மன்னரால்மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கண்ணினன்பான் வலதுகைமருவின்வேளான்
காளிசேர்வடிவுபேணுங் கதிரவன்காலினுனே.

இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்-10, மேஷசெவ்வாய்-7, ரிஷபவெள்ளி-19, மிதுனபுதன்-6, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னி புதன்-9, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, ஆக வயது-100.

### இரண்டாங்கால் மிதுனபுதன் பலன்

மேதையரலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமாலுருவமாகு மனம்பொறுக்கரியவொண்ணுன்
ருதுசேர்குழலின்மேற் றன்பொருள்சாரநில்லான்
மாதுரைவலக்கைவேலான் மாவினங்கிசத்தினனே.

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, தனுசுவியாழம்-11, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-11, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி 16, ஆக வயது-85.

### மூன்றாங்கால் வெள்ளி பலன்

தெள்ளியதியாகிநல்லன் சேயிழையாரைப்பேணு
மொள்ளியகள்ளியன்ப னென்பொருள்சாரநில்லான்
பள்ளியம்பலவுங்கற்கும் பாக்கியமுடையனாகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே.

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னி புதன்-9, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, மீனவியாழன்-1[illegible], கும்பசனி 4, மகரசனி-4, ஆ[illegible] வயது-85.

### நாலாங்கால் விருச்சிகசெவ்வாயின் பலன்

குறுகியகுறளன்மெய்யன் குறளைசேர்குதலைவாயன்
மருகியமனத்தன்பெண்மேல் மனமதுசாரநில்லான்
முருகியகொடுமைசெய்யு முதுகினிற்சுழியுமுண்டாஞ்
செறிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினனே.

### இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுன புதன் - 9, ரிஷபவெள்ளி - 16, மேஷச்செவ்வாய் - 7, ஆக வயது-100.

### இனி மகாதிசை

வெள்ளி-20, சூரியன்-6, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு 18, ராஜா-19, புதன்-17, கேது-7, ஆக வயது-120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

2-ல் ஆயுதத்தால், 5-ல் விஷத்தால், 7-ல் வைசூரியால், 9-ல் பேதியால், 14-ல் உதிரவியாதியால், 15-ல் புலியால், 18-ல்

நெருப்பால், 35-ல் அரையாப்பால், 35-ல் கண்ணோயால், 37-ல் ராசாவால், 47-ல் வஞ்சனையால், 57-ல் முழங்கால் வாதத்தால், 67-ல் சுரத்தால் கண்டம்.

இவை கடந்தால் 80-வயது சென்று ஆவணிமாதம் வெள்ளிக்கிழமை அமரபட்சம் அஷ்டமிதிதி பூரநாளுதித்து ஒரு நாழிகையில் சிலேத்துமத்தால் மரணம்.

இவை கடந்தால் 90-வயது சென்று ஆடிமாதம் ஞாயிற்றுக்கிழமை பூர்வபட்சம் பிரதமை நாளுதித்து 2-நாழிகையில் இளைப்புத்தோன்றி மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் ராஜபுருஷன், வேளாண்மை செய்வன்.

சந்திரன் உதயமாகில் தேசாந்திரி.

புதன் உதயமாகில் புத்தியுடையவன்.

வியாழம் உதயமாகில் வியாபாரி.

வெள்ளி உதயமாகில் யாவர்க்கு நல்லவன்.

சனி உதயமாகில் விசுவாசன் மிடியன்.

ராகு உதயமாகில் கலகன்.

கேது உதயமாகில் கன்னக்காரன்.

இந்நாளில் புதன்கூடில் அமிர்தயோகம்.

பெண்திரளில் மலடி.

மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரந்தோன்றில் 20-நாழிகையில் விடும். விடாதிருந்தால் நெல் பால் பொரி இவைகளை பலியிட்டு வேத மந்திரத்தால் ஓமஞ்செய்து அடுத்த விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் தேவதையை நோக்கிப் பலியிடவும்.

அந்நாளில் வானத்தில் வில்லிட்டால் 8-நாழிகையில் மழை பெய்யும்.

இந்நாளிற் பிறந்தவன் செந்நெல் தின்று, ஊர்வழியாகவும்.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் விருச்சிகத்தின் மூணரை நாழிகை செல்லும். சங்கர ஜ்ஜு.

பூச நட்சத்திரத்தின் பலன் முற்றும்

## உத்திர நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

ட-டோ-பா-பீ-உத்திரம்

இந்நாளின் பலன்

அழகியநடை யனுகு மாயிழைதன்னைப்பேணும்
பழியதுபார்த்துவாழும் பாவங்கள்செய்யமாட்டா
னுழவரைசேர்த்துவாழு முத்தமர்தம்மைக்காக்கு
மொழிபெறுமேனியாகு முத்திரநாளினனே.

உத்திர முதற்கால் கன்னியின் பலன்

சாலவேநல்லனுகுந் தந்தைதாய்தம்மைப்பேணும்
பாலனுங்காலந்தன்னிற் பரிந்துபோய்வந்துநிற்குஞ்
சீலமுமறிந்துவாழுஞ் சிறப்புடனினிதுபேசுங்
காலிலேமருவுண்டென்றுங் கன்னியின்ராசிதானே.

இந்த நட்சத்திரம் கட்டிற்கால்போலிருக்கும்.

இந்நாளினுக்கு யோனி எருது, பட்சி-மரங்குத்தி, விருட்சம்-அத்தி, கணம்-மனுஷன், தெய்வம்-ஆதித்தன், பூதம்-அக்கினி, ஜாதி-பிரதிலோமன், கோத்திரம் - அகஸ்தியன், யோகினி கௌமாரி, ஜாதி - வைணவன், ஞாயிற்றுக்கிழமை - சென் வாரம், பொருத்தம்-10, கிழக்கு தெற்கு வாசல் விடுவது. ஆனி மாதம் சூனியம்.

இந்நாளினுக்கு 18-நாழிகைக்குமேல் 100-நாழிகை விஷம்

முதற்கால் தனுசுவியாழன் பலன்

மாந்தளிர்போலமேனி மனதொத்துக்கல்விகற்கு
மேந்தியகுலத்துக்கெல்லா மிசைந்ததோரரசனுதங்
காந்தபினடக்கமாட்டான் கணங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன் பனுயிற் செய்யபொற்காலினனே.

இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னி புதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, ஆகவயது 86

இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஊனமதுடையனுகு முறவொடுபகையுமெண்ணுன்
மானமுமுடையனுகு மனம்பொறுக்கறியமாட்டான்

மேனியுமுருவு நல்லன் மிக்கதோரறிவுமில்லை
கானகந்திரிந்துவாழுங் கடைசனிகாலினனே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிகச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, ஆக வயது-83.

மூன்றுங்கால் கும்பசனியின் பலன்

ஆரையுந்தடுத்துப்பேசு மருவுதுஒன்றுமில்லான்
சீரியசெய்யவேண்டாஞ் சிதைவதைசெய்வதல்லான்
மாரியும்பொய்கள்சொல்லு மனம்பொறுக்கறியவொண்ணான்
காரியங்கிசத்தில்வந்த காளையின்வடிவுதானே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் -6, சிங்காதித்தன் -5, கடகசந்திரன் -21, கன்னிபுதன்-16, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, ஆக வயது-85.

நாலாங்கால் மீனவியாழன் பலன்

சிறிதேயொன்றும் பொய்சொல்லான் சிவந்தகண்ணன்சிறு குழலா, னறிவுமிகவேபெறுங்குணத்தா னடைந்தோர்க் கன்ப னழகியனும், பொருள்சேர்மைந்தன்மனையாளைப் பொருளென் றெண்ணுன்புகழ் விளங்கும், வரிசேர்கூந்தன்மடமாதே வியாழக் காலிற் பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-10, கன்னிபுதன்-6, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, ஆக வயது-100.

இனி மகாதிசை

சூரியன் சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-18, ராசி-16, சனி-19, புதன்-17, கேதுசுக்கிரன்-20, ஆக வயது-120.

இந்நாளிற் பிறந்தவனுக்கு முகத்தில் மருவாவது தலையில் வடுவாவதுண்டு.

இவன் நல்விருப்பமுள்ளவன், கண்ணும் கையும் அழகன், குருவுக்கும் தெய்வத்துக்கும் விசுவாசன், அடக்கம் உடையவன்,

சிறு பசியவன், பாவஞ்செய்யான், இசைகேட்க ஆசையுடையவன், உறவுடையவன், பலனுடையவன், எப்போதும் நல்ல வசனத்தையே பேசுவன், ஊதாரியாயிருப்பன் பகையில்லாதவன்.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் அக்கினியால், 5-ல் வைசூரியால், 7-ல் ஜலத்தால் 14-ல் மிருகத்தால், 19-ல் மருந்திடுவதால், 24-ல் விஷத்தால் 32-ல் ஆயுதத்தால், 45-ல் உயரத்திலிருந்து விழுதலால் 55 ல் வலிப்பால், 65-ல் வெதுப்பால், 79-ல் விஷத்தால் கண்டம்.

இவை கடந்தால் 86-வயது சென்று பித்தங் கதித்து மரணம்.

இவை கடந்தால் 96-வயது சென்று வைகாசிமாதம் வெள்ளிக்கிழமை பூர்வபட்சம் தசமி உத்திரமுதித்து ஏழு நாழிகையில் பித்தங் கதித்து மரணம் அல்லது விஷத்தால் மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் சீமான் புத்திமான்.
சந்திரன் உதயமாகில் ராஜபுருஷன் கனவான்.
செவ்வாய் உதயமாகில் வீரன் வித்துவான்.
புதன் உதயமாகில் பண்டிதன்.
வியாழன் உதயமாகில் புலவன் மந்திரி.
வெள்ளி உதயமாகில் மூடவன் சத்துருவை ஜெயிப்பவன்.
சனி உதயமாகில் கள்ளன் கடையன்.
ராகு உதயமாகில் கோளன் மூர்க்கன்.
கேது உதயமாகில் சோம்பல் தேசாந்திரி.
இந்நாளில் ஞாயிறுகூடில் மழையுண்டு.
மாதம் பிறக்கில் அகந்தாழும்.

சுரம்தோன்றில் 16-நாழிகையில் விடும். விடாதிருந்தால் நெய்யினல் ஓமஞ்செய்து தயிருஞ்சோறும் பலியிடவும்.

ஊர்வழி போகில் பால்குடித்துப் போகவும்.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் தனுசில் அரைநாழிகை செல்லும்.

நாபிரஜ்ஜு

உத்திர நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## அஸ்த நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

பூ-ஷ-ண-டா-அஸ்தம்

### இந்நாளின் பலன்

மெத்தெனநடையனுதம் வெகுளியதுடையனுகுஞ்
சித்தமாதுடையனுகுஞ் சிறுகுறியாளனுகு
முத்தமகுணத்தனுகு முறுதியையினிதாயுன்னு
மத்தமேதேடவல்ல னத்தநாடோன்றினுனே.

இந்த நட்சத்திரம் கைத்தலம்போலிருக்கும்.

இது உச்சமானுல் தனுசில் மூணரை நாழிகை செல்லும்.

### இந்நாளினுக்கு

யோகினி-எருமை, பட்சி-பருந்து, விருட்சம்-அத்தி, கணம்-தெய்வாதித்தன், சாதி-பிராமணன், பூதம்-தேயு, கோத்திரம்-அகஸ்தியன், வெள்ளிக்கிழமை-ஜென்மவாரம், பொருத்தம்-10, கிழக்கு தெற்கு வாசல் விடுவது.

இந்நாளினுக்கு 22-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம் புரட்டாசி மாதம் சூனியம்.

இவன் வார்த்தையில் வல்லவன் ஆயுதம்பிடிக்க தீரன் இவனுக்கு மார்பு அகன்றிருக்கும். புறவடி உயர்ந்திருக்கும், அழகன், புத்திமான், மேதினியில் விளங்குவான், விருப்பமுடையவன், வித்தையுடையவன், குருவுக்கு நல்லவன், நீராட உவந்தவன், சிறுபசியாளன், பலரையும் ரட்சிப்பன், கோபித்தவுடனே ஆறுவன், ராஜபிரதாப முடையவன்.

### முதற்கால் மேஷச் செவ்வாயின் பலன்

குருகியவுருவமெய்யன் குரளைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன்பெண்மேல் மனமதுசாரநில்லான்
முருகியகொடுமைசெய்ய முதுகினில்மருவுமுண்டாஞ்
செரிதருங்கூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினுனே.

### இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன் 9, கன்னிபுதன்-5, துலாம் வெள்ளி-16, விருச்சிக செவ்வாய்-7, தனுசுவியாழம்-10, ஆக வயது-100.

## இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்லன் சேயிழையாரைப்பேணு
பொள்ளியகண்ணில்வேளா னெண்பொருட்கிழவனுகும்
பள்ளியும்பலவும்கற்கும் பாக்கியமுடையனுகும்
வெள்ளியங்கிசத்தில் வந்தவிருப்புளகாளைதானே.

## இதற்குக் காலசக்கரம்

மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிக செவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, கடக சந்திரன்-21, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-9, ஆக வயது 85.

## மூன்ருங்கால் மிதுனபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டாம்
மாதுமாலுருவமாகு மனம்பொருக்கரியவொண்ணுன்
ருதுசேர்குழலாடன்மேற் றன்பொருட்சாரநில்லான்
மாதுருவலகைவேலன் மாலினங்கிசத்திணுனே.

## இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, விருச்சிகச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-ஆக வயது 83.

## நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுகு
தலைதருவல்லபத்தின் வடிவுடன்சிறந்தமேனி
பலகலைநன்குகற்கும் பாக்கியமுடையனுகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினுனே.

## இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன் 5, மிதுனபுதன்-9, துலாம்வெள்ளி-19, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, ஆக வயது 89.

## இனி மகாதிசை

ராசா-16, சனி-19, புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-9, ஆக 120.

## இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் தண்ணீரால், 5-ல் விருட்சத்தால், சுரத்தால், 25-ல் கள்ளரால், 33-ல் மிருகத்தால், 49-ல் ராஜாவால், 5[illegible]-ல் வாதத்தால், 57-ல் வஞ்சனையால், 68-ல் வியாதியால் கண்டம்.

இவை கடந்தால் 96-வயது சென்று புரட்டாசிமாதம் செவ்வாய்க்கிழமை பூர்வபட்சம் திரயோதசி அஸ்தநாளுதித்து ஒரு நாழிகையில் மரணம்.

இவை கடந்தால் புரட்டாசி மாதம் வெள்ளிக்கிழமை பூர்வபட்சம் பிரதமை அஸ்தநாளுதித்து மூன்று நாழிகையில் மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் சீமானும்.
சந்திரனுதயமாகில் பட்டத்துக்குடையவன்.
செவ்வாயுதயமாகில் சேவகன்.
புதனுதயமாகில் வித்துவான்.
வியாழமுதயமாகில் ராஜபுருட புருஷன்.
வெள்ளியுதயமாகில் ஸ்திரீயுடையவன் குருடன்.
சனியுதயமாகில் பூமிபலிதமுடையவன்.
இராகு உதயமாகில் பித்தனுவான்.
கேது உதயமாகில் புத்தியுடையவன்.
இந்நாள் நமஸ்காரம் பண்ண மணேகோல நன்று.
வானத்தில் வில்லிடில் 23-நாழிகையில் மழை பெய்யும்.
மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரந்தோன்றில் 9-நாழிகையில் விடும். விடாதிருந்தால் நெய்யினுல் வேதமந்திர ஓமஞ்செய்து விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் தேவதையை நோக்கி தயிருஞ்சோறும் பலியிடவும்.

இந்நாளிற் பிறந்தவன் நெல்லுதின்று ஊர்வழி போகவும்.

அஸ்த நட்சத்திர பலன் முற்றும்.

---

## சித்திரை நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

பே-போ-ரா-ரீ-சித்திரை

இந்நாளின் பலன்

கடுகியேநடக்கவல்லன் கன்றிரமனத்தனுகு
மிடுக்கமாங்காலந்தன்னி லீன்றதாய்தந்தைபேணுந்
துடியிடைமைந்தர்மாதர் சுகங்களுஞ்சுகிக்கவல்லன்
திடமதுபேசவல்லன் சித்திரைநாளினுனே.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் தனுசில் 5-நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி-ஆண்புலி, பட்சி-வான்கோழி, விருட்சம்-வில்வம், கணம்-ராக்ஷதன், தெய்வம்-இந்திரன், பூதம்-தேயு, கோத்திரம்-அக்கினி, யோகினி-சாமுண்டி, வெள்ளிக்கிழமை சென்மவாரம், ராசி முன்னரைபுதன், பின்னரை துலாம், பொருத்தம்-7, கிழக்கு வாசல்விடுவது.

இந்நாளினுக்கு 20-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இந்நாளிற் பிறந்தவன் அழகுடையவன், புத்திமான், ஸ்திரீ கண்ணன், வீண்சொல்பொருன், கோபமுடையவன், மார்பு அகன்றிருக்கும், வார்த்தை சொல்லவல்லன், தன் வார்த்தை மேலாயிருப்போன், பொருள்தேடி அழிக்க வல்லவன், அரையிலாவது முகத்திலாவது மருவுண்டு.

முதற்கால் சிங்காதித்தன் பலன்

நீளியசெய்யசால நிபுணனுய்கல்விகற்கு
மாளிகைமணியில்வாழு மன்னரால்மகிழ்ச்சியுண்டாம்
வேளிசேர்கண்ணினன்பன் வேல்திசைமருங்குவேலால்
காளிசேர்வதனனுகுங் கதிரவன்காலினுனே.

இதற்குக் காலசக்கரம்

விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன் 5, மிதுனபுதன்-9, ரிஷப வெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, ஆக வயது-100.

இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மந்திரமறைகள்கற்று மன்னராலருளுமுண்டாஞ்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோன்றியதிசையுந்தோற்று
மந்தரப்பொய்கள்சொல்லா னரும்பொருணெருங்கிவாழும்
புத்தியிற்பெரியனுகும் புனிதனங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-16, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, ஆக வயது 85,

### மூன்ருங்கால் துலாம்வெள்ளியின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமருவுமுண்டாஞ்
சீர்தருமுத்திபேணுஞ் சிறுகுழியாளனுக
மாதரவுடையனுகு மறிவுடனன்குகற்குஞ்
சார்வதுமாதர் தம்பாற் றரும்புகர்காலினுனே

### இதற்குக் காலசக்கரம்

துலாம்வெள்ளி-14, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, ஆக வயது 8?.

### நான்காம்கால் விருச்சிக செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுமுன்னுடையனுதஞ்
சிட்டரைச்சேர்ந்துவாழுஞ் சிறுகுழியாளனுகும்
பட்டயமணிந்ததோளான் படைக்கெலாந்தலைவனுத
மட்டெனவொன்றும்வேண்டா னெரியினங்கிசத்தினுனே.

### இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-21, சிம்மாதித்தன்-5, மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10. கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, ஆக வயது 86,

### இனி மகாதிசை

செவ்வாய்-7, ராகு-18, ராஜா 16, சனி-19, புதன்-17, கேது-7, வெள்ளி - 20, சூரியன் - 6, சந்திரன் - 10, ஆக வயது-120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

5-ல் வயிற்றுக்கட்டி வெறுப்பால், 7-ல் வைசூரியால், 12-ல் நாலுகால் மிருகத்தால், 14-ல் உயரத்திலிருந்து விழுவதால், 18-ல் தண்ணீரால், 22-ல் மருந்திடலால், 27-ல் அரைப்பால், 25-ல் கழல்வாதத்தால், 48-ல் நெருப்பால், 64-ல் வாதத்தால் கண்டம்.

இவை கடந்தால் 99-வயது சென்று பூர்வபட்சம் அஸ்தமித்திரை நாளுதித்து 3-நாழிகைக்குமேல் காலெரிப்பதால் மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் மிடியன்.
சந்திரன் உதயமாகில் ராஜபுருஷன்.
செவ்வாய் உதயமாகில் துட்டையன், கோளன், பாதகன்.
புதன் உதயமாகில் பண்டிதன், பாட வல்லவன்.
வியாழம் உதயமாகில் மந்திரியாவான்.
வெள்ளி உதயமாகில் மிடியன், வாகனமுடையவன்.
சனி உதயமாகில் மிடியன்.
இராகு உதயமாகில் கலகன்.
கேது உதயமாகில் கோளன்.

மாதம் பிறக்கில் அகந்தாழும்.

சுரந்தோன்றில் 7-நாழிகையில் விடும்.

விடாதிருந்தால் பஞ்சவர்ணச்சோறு பலியிட்டு வேதமந்திரத்தால் ஓமஞ்செய்து அடுத்த விருட்சத்தில் தேவதையை நோக்கி பலியிடவும்.

இந்நாளில் ஊர்வழி போக நேரிட்டால் நல்லெண்ணெய் சாப்பிட்டுப் போகவும்.

சித்திரை நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## சோதி நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

ரூ-ரே-ரோ-தா-சோதி

இந்நாளின் பலன்

சொல்லவும்வல்லனுகுஞ் சொரிபடுங்கையனுகு
மில்லையென்றுரைக்கமாட்டா னினியசொற்புகழுந்தேடு
மல்லதேபலவுஞ்செய்ய னுயுதம்பிடிக்கவல்லன்
தொல்லுரைபலவுங்கற்குஞ் சோதினுடோன்றினுனே.

இந்நாள் கொண்ட துலாராசியின் பலன்

கற்றறிந்தோர்க்குநல்லன் கடக்கவேகொடுமைசெய்யான்
வெற்றியுமுடையனுவன் வெகுளிசொல்லுடையனுகும்
வித்தைகள்பலவுங்கற்று வீணையும்பாடவல்லன்
சுற்றமுங்கிளையும்வாழுந் துய்யதோர்துலாத்தினுனே.

இந்த நட்சத்திரம் துலாம்போலிருக்கும்.

இது உச்சமாகில் மகரத்தில் ஒண்ணரை நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி-கிடா, பட்சி-தேன்சு, விருட்சம்-மருதமரம், கணம்-தெய்வம், ஜாதி-வைசியன், தெய்வம்-வாக்கு, பூதம்-அக்கினி, கோத்திரம்-இந்திரன், யோகினி-மயேஸ்வரி, வெள்ளிக்கிழமை-ஜென்மவாரம், பொருத்தம்-7, தெற்கு வாசல் விடுவது.

இந்நாளினுக்கு 15-நாழிகைக்குமேல் 4 நாழிகை விஷம், ஐப்பசி மாதம் சூனியம்.

இந்நாளிற் பிறந்தவன் தெய்வபக்தி யுடையவன், புறகடி உள்ளங்கால் உயர்ந்திருக்கும். குணவான், விசுவாசிதன், ஜாதிப்பிறப்புகளுக்கு நல்லவன், போஜனப்பிரியன், ஸ்திரீ கண்ணன், துடையில் மருவுண்டு, உடம்பு பருத்திருக்கும், குள்ளனுயிருப்பான், புத்திருண்டு.

முதற்கால் தனுசு வியாழத்தின் பலன்

பொருள் சேர்மைந்தன் மனையாளைப் பொருளென்றெண்ணன் புகழ்விளங்குஞ், சிறிதேயொன்றும் பொய்சொல்லான் சிவந்தகண்ணன் செறிகுழலா, னறிவுமிக பெருங்குணத்தா னடைந்தோர்க் கன்பனழகியனும், வெறிசேர்கூந்தன் மடமாதே வியாழக்காலிற் பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-6, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, ஆக வயது-100.

இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஆரையுமறிந்துபேணு மரும்பொருணெருங்கிவாழுஞ்
சீரியசெய்வதல்லாற் சிதையவேசெய்யவேண்டான்
வாரியாய்பொய்கள்சொல்வான் மனம்பொறுக்கரியான்மேலும்
காரியகுசலனுதுங் காரியினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மகரச்னி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-19, ஆக வயது-85.

மூன்ருங்கால் கும்பசனியின் பலன்

ஊனமதுடையனுகு முறவொடுபகையுமெண்ணுன்
மானமதுடையோனுகும் வழக்கறிந்துரைக்கவல்லன்
மேனியுமுருவுநல்லன் மிக்கதோரறிவுமில்லன்
கானகந்திரிந்துவாழுங் காரியங்கிசத்திருனே.

இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி 4, தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, ஆக வயது-83.

நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

மாந்தளிர்போலுமேனி மதிமுகமருவுண்டென்று
மேந்தியகுலத்திற்கெல்லா மிசைந்ததோர்குருவுமாவான்
காய்ந்தபின்னடக்கமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுகுஞ் செய்யபொற்காலினுனே.

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழன்-10, மகர சனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, ஆக வயது-86.

இனி மகாதிசை

ராகு-18, ராஜா-16, சனி-19, புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-6, சந்திரன்-10, செவ்வாய்-7, ஆக வயது-120.

இவன் பிறந்தவாண்டில் கண்டம்

3-ல் வெதுப்பால், 4-ல் வைசூரியால், 7-ல் நாற்கால் மிருகத்தால், 12-ல் விஷத்தால், 15-ல் உதிர வியாதியால், 25-ல் ஸ்திரீகளால், 29-ல் மருந்திடலால், 35-ல் ராஜபடையால், 40-ல் மிருகத்தால், 47-ல் முள்ளால் முழங்கால் வாதத்தால், 54-ல் நீரிழிவால், 65-ல் வயிற்றுக்கடுப்பால் கண்டம்.

இவை கடந்தால் 73-வயது சென்று ஐப்பசிமாதம் சனிக்கிழமை பூர்வபட்சம் ஏகாதசி திருவாதிரை யுதித்து 20-நாழிகைக்குமேல் தலைக்குத்தால் மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் வியாபாரி.
சந்திரன் உதயமாகில் சீமான் பலருக்கும் நல்லவன்.
செவ்வாய் உதயமாகில் கோபமுடையவன்.
புதன் உதயமாகில் பண்டிதன்.
வியாழம் உதயமாகில் ராஜனுவான்.
வெள்ளியுதயமாகில் வேளாண்மை செய்வான்.
சனி உதயமாகில் கள்ளன் வல்லவன்.
இராகு உதயமாகில்-தேசாந்திரி.
கேது உதயமாகில் குருடன் விகாரி.

இந்நாளில் வானத்தில் வில்லிடில் மழையுண்டு.

இந்நாளில் மாடு கொள்ள, பொன் பூண, கோடியுடுக்க தானம்பண்ண, வித்தை சொல்ல நன்று.

பெண்திரளில் பிள்ளையுண்டாம்.

மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரம் தோன்றில் 16-நாழிகையில் விடும் விடாதிருந்தால் கோதுமையரிசி வேதமந்திரத்தால் ஓமஞ்செய்து விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரை தேவதையை நோக்கி பலியிடவும்.

இந்நாளில் பிரதேசம்போக நேரிடில் நெல்லரிசி தின்று போகவும்.

சோதிட நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## விசாக நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

தீ-து-தே-தோ-விசாகம்

இந்நாளின் பலன்

ஈன்றதாய்தந்தைபேணு மின்பமேதேடவல்ல
நீண்டதத்துவத்தைப்பேணு நீதியுமுடையனுகும்
மீண்டிரையொன்றுஞ்சொல்லான் வெட்டெனப்பேசவல்லன்
வேண்டியபேர்க்குநல்லன் விசாகநாட்டோன்றினனே.

இந்த நட்சத்திரம் சுளகுபோலிருக்கும்.

இது உச்சமாகில் 5-நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி-பெண்புலி, தெய்வம்-காளி, பூதம்-அக்கினி, பட்சி-வல்லக்குருவி, விருட்சம்-விளா, கணம் - மனுஷன், வெள்ளிக்கிழமை சென்மவாரம்.

இந்நாளில் பெண் திரளில் விதவையாவாள்.

வருஷம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளினுக்கு 14-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இந்நாளில் வெதுப்பு தோன்றில் 20-நாழிகையில் விடும். விடாதிருந்தால் நெய்யால் ஓமஞ்செய்து கந்தபுஷ்பமுஞ்செய்து உடுத்தின புடவையும் கம்பளி ஆடு இவைகள் தானங் கொடுக்கவும் ஆயுசு விர்த்தியாதும்.

இந்நாளிற் பிறந்தவன் நீதியும், தெய்வபக்தியு முடையவன், முகம் வட்டமாயிருக்கும் அழகன்.

முதற்கால் விருச்சிகசெவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன் னுடையனுகுஞ்
சிட்டரைச்சேர்ந்துவாழுஞ் சிறுகுபியாளனுகும்
பட்டயமணிந்ததோளன் படைக்கெலாந்தலைவனும்
வெட்டெனவொன்றுமஞ்சா னெறியினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, மகரசனி 4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, ஆக வயது 86.

இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமருவுண்டென்றுஞ்
சீர்தருமுத்திபேணுஞ் சேய்தருங்கொடுங்கண்ணுள
னுதரவுடையனுகு மறிவுடனறிவுகற்குஞ்
சார்வதுமாதர்தன்பாற் றரும்புகர்க்காலினனே.

இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன்-9, துலாம்வெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, விருச்சிக செவ்வாய்-7, துலாம்வெள்ளி-19, ஆக வயது-86.

மூன்றாங்கால் மிதுனபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதராலருளுமுண்டாஞ்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோளிலேதிசையுமுண்டா
மந்திரப்பொய்கைசொல்லா னரும்பொருனெருங்கிவாழும்
புந்தியிற்பெரியனுதும் புதனினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுன புதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, ஆக வயது-85.

நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுகு
மலைதருவல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்றிகற்குங் கடிமதிக்களையாகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினனே.

இதற்குக் காலச்சக்கரம்

மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, ஆக வயது-86.

இனி மகாதிசை

ராஜா-16, சனி-19, புதன்-17, கேது-7, வெள்ளி-20, சூரியன்-4, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-18, ஆக வயது-120.

இவன் பிறந்தவாண்டில் கண்டம்

5-ல் சிலந்தியால், 7-ல் நெருப்பால், 33-ல் நீர்ப்பாட்டால், 40-ல் மிருகத்தால், 56-ல் ஆயுதத்தால், சூலை நோயால், 66-ல் பித்தவாதத்தால், 68-ல் பித்தபாண்டால், வெதுப்பால் கண்டம்.

இவை கடந்தால் 89-வயது சென்று ஆவணிமாதம் பூர்வ பட்சம் திரயோதசி செவ்வாய்க்கிழமை விசாகமுதித்து 4-நாழிகையில் வெதுப்பு சிலேத்துமம் இளைப்புதோன்றி மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் சீமானுவான்.
சந்திரன் உதயமாகில் தனவான்.
செவ்வாய் உதயமாகில் விலங்குபூணுவான்.
புதன் உதயமாகில் வேளாண்மை செய்வன்.

வியாழம் உதயமாகில் ராஜபுருஷன்.
சனி உதயமாகில் கள்ளன்.
ராகு உதயமாகில் தபசியாவான்.
கேது உதயமாகில் துஷ்டன்.

நாபிரஜ்ஜு

விசாக நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## அநுஷ நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

ந-நீ-நூ-நே-அநுஷம்

இந்நாளின் பலன்

கார்பரிகளிறும்போலே கடுஞ்சொற்கள்பேசவல்லான்
சீறியசெய்யவேண்டான் செந்தமிழ்க்கொன்றுமீயான்
தூரனுயிருக்குஞ்சால துக்கமுஞ்சொல்லவல்ல
ஞரவேசெய்வதல்லா மனுஷநாட்டோன்றினனே.

இந்நாளினுக்கு தெய்வம்-சூரியன், பூதம்-வாய்வு, ஜாதி-அனுலோமன், யோனி-மரணம், மானபட்சி-சக்கிரவாகப்புள், விருட்சம்-மகிழ், கணம்-தெய்வம், யோகினி-பிராமணி, செவ்வாய்க்கிழமை ஜென்மவாரம்.

இந்நாளில் வருஷம் பிறக்கில் அகமேறும்.

கார்த்திகை மாதம் சூனியம்.

இந்நாளிற்கு 14-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இந்நாளில் வெதுப்பு தோன்றில் 9-நாழிகையில் விடும். விடாதிருந்தால் நெய்யால் ஓமம் பண்ணவும்.

இவன் கண்ணழகன், பெண்சாதி விருத்தியுள்ளவன், தெய்வம்-பிராமணுள், ஆசாரிமார், மாதா, பிதா, வித்துவான் இவர்கட்கு நல்லவன், தன்னை யடைந்தபேருக் கிரக்கமுடையவன். மூக்குநுனி உயர்ந்திருக்கும் புத்தியுடையவன்.

முதற்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுகு
மலையெனவளர்ந்ததோளான் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்றிகற்குங் கடிமதக்காளையாகு
மலைதரும்வல்லபத்தன் மதியினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்–10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, சிங்காதித்தன் 6, கடகசந்திரன்–21, கன்னி புதன்-9, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, ஆக வயது 101.

இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமாலுருவமாகு மனம்பொறுக்கறியவொண்ணன்
ருதுசேர்குழலினர்க்குத் தன்மனஞ்சாரநில்லான்
காதலுமுடையனுதுங் கன்னியனங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷசெவ்வாய்-7, மீனவியா ழம்-10, தனுசுவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, விருச்சிகச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16; ஆக வயது 89.

மூன்றுங்கால் துலாம்வெள்ளியின் பலன்

தெள்ளியசெய்யநல்லன் சேயிழையாரைப்பேணு
மொள்ளியகண்ணில்வெள்ளானென் பொருட்கள்வனுகும்
புள்ளியம்பலவுங்கற்கும் பாக்கியமுடையனுகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னி புதன்-9, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்–7, மீனவியா ழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, ஆக வயது 85.

நாலாங்கால் விருச்சிக செவ்வாயின் பலன்

ஒருகியவுருவமெய்யன் குறளைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன்பெண்மேல் மனமதுசாரநில்லான்
முருகியகொடுமைசெய்யு முதுகிலேசுழியுமுண்டாஞ்
செரிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாவெள்ளி-16, கன்னிபுதன்-9, சிங்காதித்தன் -5, கடகசந்திரன்-21, மிதுன புதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்–4, ஆக வயது 100.

இனி மகாதிசை

சனி-19, புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-9, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-10, ராஜா-19, ஆக வயது 120.

இவன் பிறந்தவாண்டில் கண்டம்

4-ல் சிலந்தி வெதுப்பால், 7-ல் வெதுப்பால், 13-ல் நாய் கடியால், நீரால், 22-ல் ஸ்திரீகளால், மருந்திடலால், 28-ல் நாற்கால் மிருகத்தால், 33-ல் சத்துருவால், விஷத்தால், 40-ல் வயிற்றுநோயால், 44-ல் முழங்கால் வாதத்தால், நீர்ப்பாட்டால், 55-ல் மண்டை வியாதியால், 65-ல் வெதுப்பால், 83-ல் வெதுப்பு வயிற்று நோயாற் கண்டம்.

இவை கடந்தால் 100-வயது சென்று வைகாசிமாதம் 7-நாழிகையில் மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் சேதுபதி.
சந்திரன் உதயமாகில் தனவான்.
செவ்வாய் உதயமாகில் ராசனுவான்
வெள்ளி உதயமாகில் வேளாண்மைசெய்வன்.
சனி உதயமாகில் குள்ளன்.
இராகு உதயமாகில் முடவன்.
கேது உதயமாகில் சோரன்.

இந்த நட்சத்திரம் உதித்தால் கும்பத்தில் இரண்டு நாழிகை செல்லும், முதற்கால் பிதாவுக்கு அரிஷ்டம்.

சங்கரஜ்ஜு

அனுஷ நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## கேட்டை நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

நோ-யா-யீ-யூ-கேட்டை

இந்நாளின் பலன்

வலியபோரதுவிருப்பான் வருவினைபொருந்திவாழும்
வலினமுமிகவுண்டென்று மிகுந்ததோர் தானஞ்செய்வான்
கலையதுவுடையனுகுங் கனமிகுபெரியனுகுஞ்
சிலையொருதுடையனுகுங் கேட்டைநாடோன்றினனே.

இந்நாளினுக்கு தெய்வம்-சந்திரன், பூதம்-வாய்வு, ஜாதி-பிரதிலோமன், கோத்திரம்-வைசியன், யோகினி-கௌமாரி, யோனி-கலைமான், பட்சி-சக்கரவாகப்புள், விருட்சம்-பலா, கணம்-ராக்ஷதன்.

கார்த்திகை மாதம் சூனியம்.

வருஷம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளினுக்கு 50 நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இந்நாளில் வெதுப்பு தோன்றில் 20-நாழிகை விடும்; விடாதிருந்தால் விழலரிசியும், எலுமிச்சம் வித்துங் கூட்டி நெய்யினுல் ஓமஞ் செய்யவும்.

இந்நாளில் பிறந்தவன் அழகியன், செறிந்தகுழலுடையவன் மூக்குநுனி உயர்ந்திருக்கும், வித்துவான்களுக்கு நல்லவன். தின்னும்பண்டம் வேண்டி யிருப்பவன், வலதுபுயத்தில் மறுவுண்டு, கல்வியுடையவன் சிவந்த மேனியன்.

இந்நாளில் பெண்திரளில் விதவையாவாள்.

முதற்கால் தனுசு வியாழத்தின் பலன்

மாந்தளிர்போலமேனி மனதுடன் கல்விகற்கு
மேந்தியகுலத்துக்கெல்லா மிசைந்ததோரரசனுவன்
காய்ந்தபின்னடக்கமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுகுஞ் செம்பொனங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னிபுதன்-9, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, ஆக வயது-100.

இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஊனமதுடையனுத முகந்தவர்க்குரைக்கவல்லன்
மானமதுடையனுகு மனம்பிறர்க்கரியவொண்ணுன்
மேனியுமுருவநல்லன் மிக்கதோரறிவுமில்லை
கானகந்திரிந்துவாழுங் காரியினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, ஆக வயது-83.

மூன்ருங்கால் கும்பசனியின் பலன்

ஆரையுமறிந்துபேணு மரும்பொருட்கன்பனுகுஞ்
சீரியசெய்யவேண்டாஞ் சிலவதுசெய்வன்மிக்க
மாரிவாய்பொய்கள்சொல்லான் வழக்கறிந்துரைக்கவல்லன்
காரியங்குசலனுதங் காரியங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னிபுதன்-9, துலாம்வெள்ளி-19, விருச்சிகசெவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, ஆக வயது-85.

நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

சிறிதேயொன்றும் பொய்சொல்லான் சிவந்தகண்ணன்சிறுகுழலா, னறிவுமிகவேபெருங்குணத்தா னடைந்தோர்க் கன்பனழகியனும், பொருள்சேர்மைந்தன்மனையாளைப் பொருளென்றெண்ணுன் புகழ்விளங்கும், வெறிசேர்கூந்தன் மடமானே வியாழக்காலிற் பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, ஆக வயது-100.

இனி மகாதிசை

புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-6, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-16, சனி-19, ஆக வயது-130.

இவன் பிறந்தவாண்டில் கண்டம்

4-ல் உதிரவியாதியால் கண்ணேயால், 7-ல் நாய்க்கடியால், 13-ல் விஷத்தால், 16-ல் எரிவால், 21-ல் நீரால், 22-ல் ஸ்திரீகளால், 30-ல் குலைநோயால், 50-ல் சிரங்கால், கண்ணேயால், 53-ல் வெதுப்பு வயிற்றுநோயால் கண்டம்.

இவைகடந்தால் 60-வயது சென்று கார்த்திகைமாதம் அமரபட்சம் திரியோதசி செவ்வாய்க்கிழமை கேட்டைநாளுதித்து 4-நாழிகையில் வெதுப்பு தோன்றி மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் சேனாதிபதி.
சந்திரன் உதயமாகில் மந்திரி.
செவ்வாய் உதயமாகில் உத்தியோகஸ்தன்.
புதன் உதயமாகில் கல்விமான்.
வியாழம் உதயமாகில் பண்டிதன்.
வெள்ளி உதயமாகில் வியாபாரி.
சனி உதயமாகில் கோளன்.
இராகு உதயமாகில் இரந்துண்போன்.
கேது உதயமாகில் யோகி.

இந்த நட்சத்திரம் உச்சமானால் கும்பத்தில் ஒண்ணரை நாழிகை செல்லும்.

இந்நாளில் பிள்ளையாவது பெண்ணாவது பிறந்தால் தாய் தந்தை மாமன் இவர்களுக்கு தோஷம்.

இதற்குப் பரிகாரம் ஆவின்பால் சிவாலயங்களுக்கு அபிஷேகஞ் செய்து நெய் தாமரை நூலால் தீபம்வைத்து பிராமணாளுக்கு போசனஞ் செய்வித்து திருவள்ளுவருக்கு அபிஷேக தானஞ் செய்யவும். பாதரஜ்ஜு.

கேட்டை நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## மூல நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

யே-யோ-யா-மூலம்

இந்நாளின் பலன்

அகலியசொல்ல வல்ல னாயுதம்பிடிக்கவல்லன்
சுகமுறுசிறுவனாகுஞ் சுற்றமுஞ்சூழ்ந்துவாழு
மிகவுயற்கல்விகற்கும் வேற்கைமேல்விருப்பமில்லான்
முகமதுகலியனாகு மூலநாடோன்றினானே.

### தனுசு ராசியின் பலன்

சிந்தையில்வணிகனுகுந் திருவிருமார்பனுக்கு
மந்தமாமழகனுகு மரிவையாவசத்தனுகுங்
கந்தமாபானுகந்த காதலாய்கல்விகற்குந்
தந்தைதாய்தம்மைபேணுந் தக்கதோர்தனுவினுனே.

இந்நாளினுக்கு தெய்வம் - ஈசுவரன், பூதம் - வாயு, யோகினி-வராகி, சாதி-பிராமணன், கோத்திரம்-புலஸ்தியன், யோனி-பெண் நாய், பட்சி-செம்போத்து, கணம்-ராக்ஷதன், வியாழக்கிழமை-ஜென்மவாரம்.

இந்நாளினுக்கு மார்கழிமாதம் சூனியன்.

20-நாழிகைக்குமேல் 4-நாழிகையில் விஷம்.

இந்நாளில் சுரந்தோன்றில் 4-நாழிகையில் விடும், விடா திருந்தால் வேதமந்திரத்தினுலே ஓமம்செய்து கருப்பஞ்சாற்ருல் சாதம் சமைத்து பலியிடவும்.

உடுத்தின வஸ்திரம், கம்பளி, ஆடு தானங்கொடுக்கவும். உளுந்தும், சோறும், கடுகும் கலந்து நாலுதிசைக்கும் பலி யிடவும்.

இந்நாளிற் பிறந்தவன், கோபமுடையவன், செய்நன்றி யுடையவன், பண்டிதனு யிருப்பான், வீண்சொல் பொருன், புறவடி உயர்ந்திருக்கும், கண் செவ்வரி பரந்திருக்கும்.

### முதற்கால் மேஷச்செவ்வாயின் பலன்

குறுகியபுருவமெய்யன் குரலேசேர்குதலையாவன்
மருவியமனத்தன்பெண்மேல் மனமதுசாரநில்லான்
முழுகியகொடுமைசெய்யு முதுகினிற்சுழியுமுண்டாஞ்
செறிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினுனே.

### இதற்குக் காலசக்கரம்

மேஷச் செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-17, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழன்-10, ஆக வயது 100.

### இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்ல சேயிழையாரைப்பேணு
மொள்ளியகன்னில்வெள்ளா னுருபொருணிருபனுகும்
பள்ளியும்பலவுங்கற்கும் பாக்கியமுடையனுகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளேதானே.

இதற்குக் காலசக்கரம்

மகரசனி-4, கும்பசனி–4, மீனவியாழம்-10, விருச்சிகசெவ் வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்–5, மிதுனபுதன்-9, ஆக வயது 85.

மூன்ருங்கால் மிதுனபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமாலுருவமாகு மனம்பொறுக்கறியவொண்ணுன்
ருதுசேர்குழலினுளே தன்பொருள்சாரநில்லான்
மீதுருவலக்கைவேளான் மிதுனவங்கிசத்திருனே.

இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி-6, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷச்செவ் வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-6, ஆக வயது 70.

நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுகு
மலைதருவல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்குகற்கும் கடிமதக்காளையாகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்திருனே.

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-6, கன்னியாபுதன்–9, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி 4, மீனவியாழம்-10, ஆக வயது 87.

இனி மகாதிசை

கேது-7, வெள்ளி-20, சூரியன்-6, சந்திரன்-10, செவ் வாய்-7, ராகு–18, ராஜா–16, சனி-19, புதன்-17, ஆக வயது 120.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

12-மிருகத்தால், 20-ல் உயரமேறி விழுதலால், 44-ல் சத்துருவால், 64-ல் வெதுப்பால், குலேநோயால், 75-ல் தலை நோயால், 80–ல் பேதியால் சிலேத்துமத்தால் கண்டம்.

இவை கடந்தால் 100-வயது சென்று ஆவணி மாதம் அமரபட்சம் பஞ்சமி வெள்ளிக்கிழமை மூல நட்சத்திரமுதித்து 15-நாழிகையில் வெதுப்பு பித்தந்தோன்றி மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் தளபதி.

சந்திரன் உதயமாகில் சீமானுவான்.

செவ்வாய் உதயமாகில் கோளன்.

புதன் உதயமாகில் மணியக்காரன்.

வியாழம் உதயமாகில் ராஜபுருஷன்.

வெள்ளி உதயமாகில் வியாபாரி.

சனி உதயமாகில் கோளன்.

ராகு உதயமாகில் கலகன்.

கேது உதயமாகில் மிடியன்.

இந்த நட்சத்திரம் உச்சமானுல் கும்பத்தில் 4-நாழிகை செல்லும். பாதரஜ்ஜு

மூல நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## பூராட நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

பூ-கா-பா-டா-பூராடம்

இந்நாளினுக்கு

கையதுகமனமாகும் கருமங்கள்பலவுஞ்சொல்வான்
தையலுக்கினியனுகும் தந்தைதாய்தமக்குநல்லன்
மெய்குடையையனுகும் விரும்பியேகல்விகற்கும்
பொய்யுரையொன்றுஞ்சொல்லான் பூரநாடோன்றினுனே.

இந்நாளினுக்கு தெய்வம்-ஈஸ்வரன், பூதம்-வாய்வு, ஜாதி-வைசியன், கோத்திரம்-புலஸ்தியன், யோனி-ஆண்குரங்கு, பட்சி-வண்டலாங்குருவி, விருட்சம்-வன்னிமரம், கணம்-மனுஷன். ஜென்மவாரம்-வியாழக்கிழமை.

இந்நாளில் வருஷம் பிறக்கில் அகமேறும்.

24-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இதில் வெதுப்பு தோன்றில் 8-நாளில் விடும். விடாதபோது மந்திரஞ்சொல்லி நெய்யாலே ஓமஞ்செய்து கடுகு மாமிசம் பலியிட்டு திசைதானம் பண்ணவும்,

இந்நாளில் பெண்திரளில் விதவையாவாள்.

இந்நாளிற் பிறந்தவன் திருவுடையவன், வித்தைமேலாசை யுடையவன், வீரியன் திறமையுள்ளவன்.

பூராட முதற்கால் சிங்காதித்தன் பலன்

நீளியசெய்யசால னிபுணனுய்நேசஞ்செய்வன்
மாளிகைமனையில்வாழ்வன் மன்னரால்மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கன்னியாகு மனமதுசாரநில்லான்
காளிசேர்வடிவுதோன்றுங் கதிரவன்காலினுலே.

இதற்குக் காலசக்கரம்

விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னியாபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழன்-10, ஆக வயது-100.

இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதராலருளுமுண்டாஞ்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோளிலேதிசையுமுண்டாஞ்
மந்திரப்பொய்கள்சொல்ல மரும்பொருணெருங்கிவாழும்
புந்தியிற்பெரியனுகும் புதனினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-18, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-), ஆக வயது-87.

மூன்ருங்கால் துலாம்வெள்ளின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமருவுண்டென்றுஞ்
சீர் தருமுத்திபேணுஞ் சேய்தருங்கொடுங்கண்ணுள
ஞதரவுடையனுகு மறிவுடனன்குகற்குஞ்
சார்வதுமாதர்தம்பாற் றரும்புகர்க்காலினுவன்.

இதற்குக் காலசக்கரம்

துலாம்வெள்ளி-19, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, ஆக வயது-86.

நாலாங்கால் விருச்சிகசெவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன்னுடையனுகுஞ்
சிட்டரைச்சேர்ந்துவாழும் சிறுகுறியாளனுகும்

பட்டயமணிந்ததோளன் படைக்கெலாந்தலைவனுகும்
மிட்டருக்கினியனுகி மெரியினங்கிசத்திருனே.

இதற்குக் காலசக்கரம்

சிங்காதித்தன்-5, கடகசந்திரன் 21, மிதுனபுதன்-9, ரிஷப வெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, ஆக வயது-86.

இனி மகாதிசை

சந்திரன்-20, சூரியன்-6, சனி-10, செவ்வாய்-7, ராகு-18, ராஜா-19, புதன்-17, கேது-7, ஆக வயது-120.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

4-ல் வெதுப்பால், 9-ல் மிருகத்தால், 11-ல் நீர்ப்பாட்டால் 19-ல் விருட்சத்தால், 22-ல் கண்ணேயால் அக்கினிக்கிரந்தியால், 28-ல் தேசாந்திரம், 30-ல் ராசாவால், 34-ல் சத்துருவால், 40-ல் வெதுப்பால் 45-ல் பக்கவியாதி மூலத்தால், 57-ல் வாதத்தால், வெதுப்பால், 59-ல் சிலேட்டுமத்தால், 67-ல் வெதுப்பால் கண்டம்.

அவை கடந்தால் 86-வயது சென்று ஐப்பசிமாதம் அமரபட்சம் பிரதமை வெள்ளிக்கிழமை மூலநாளுதித்து 21-நாழிகையில் வெதுப்பித்த சிலேத்துமத்தால் மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் வெகுமானத்தன்.
சந்திரன் உதயமாகில் பயிர்பலனுடையவன்.
செவ்வாய் உதயமாகில் நன்மைப்படவாழ்வன்.
வியாழம் உதயமாகில் சூரன்.
வெள்ளி உதயமாகில் கல்வியுடையவன்.
சனி உதயமாகில் ஊனனுவான்.
ராகு உதயமாகில் கள்ளன் துஷ்டன்.
கேது உதயமாகில் தரித்திரமுடையவன்.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் மீனத்தில் ஒண்ணரை நாழிகை செல்லும்.

இந்நாளில் பிள்ளை பிறந்தால் மாதா பிதா மாமன் இவர்களுக்காகாது. இதற்கு பரிகாரம் சிவலிங்கத்திற்கு அர்ச்

சனை செய்து அன்னுபிஷேகஞ்செய்யவும், திருவள்ளுவருக்கு அறுசுவை அன்னமிட்டு கம்பளிதானங் கொடுக்கவும்.

சங்கரஜ்ஜு

பூராட நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## உத்திராட நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

பே-போ-ஜா-ஜீ-உத்திராடம்

இந்நாளின் பலன்

நித்தனைத்துதிக்கவல்ல னிசமுகந்தாடவல்லன்
கொத்தலர்குழலினுர்க்குக் குவிமுலைவசத்தனுகுஞ்
சித்தமதுடையனுகுஞ் செகந்தனிற்சலித்தோர்க்கீவா
னுத்தமகுணத்தனுகு முத்திராடநாளினுனே.

மகர ராசியின் பலன்

நிலையின்றித்திரிந்துவாழு நிர்மனதுடையனுகுங்
கலைபலநன்றிகற்குங் கருமமேகருதிச்செய்வான்
வலைமனமருனமுள்ளோன் வழக்கறிந்துரைக்கவல்லன்
மலையெழுகடலுங்கீர்த்தி வாய்த்திடுமகரத்தானே.

இந்நாளினுக்கு தெய்வம்—ஈஸ்வரன், பூதம் - அக்கினி, யோகினி-மயேஸ்வரி, ஜாதி-வைசியன், கோத்திரம்-வசிட்டன், யோனி-மலட்டுப்பசு, பட்சி—வலியன், விருட்சம்-பலாமரம், கணம்-மனிதன், வியாழக்கிழமை—ஜென்மவாரம்.

இந்நாளில் பெண்திரளில் தனதான்ய சம்பத்தும், புத்திரரும் உண்டாம்.

இந்நாளில் வருஷம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளிற்கு 20-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இதில் வெதுப்பு தோன்றில் 9-நாளில் விடும். விடாதிருந்தால் வேதமந்திரஞ் சொல்லி நெய்யாலே ஓமஞ்செய்து பொரியும் எள்ளும் பாலுங் கலந்து பலியிட்டு உடுத்திய வஸ்திரம் கம்பளி ஆடு இவை தானஞ் செய்யவும்.

இந்நாளில் ஊர் பிரயாணம் போக நேரிட்டால் பாலும் சோறும் புசித்துப் போகவும்.

இந்நாளிற் பிறந்தவன் தெய்வத்திற்கும் குருவுக்கும் பிராமணுளுக்கும் நல்லவன், பக்தியுடையவன், எருமை விருத்தியுடையவன், இவன் மனதை ஒருவராலும் அறியப்படாது, இவனுக்கு முகத்திலேயாவது அரையிலேயாவது மருவுண்டு, சிவந்த கண்ணன்.

முதற்கால் தனுசுவியாழத்தின் பலன்

சிறிதேயொன்றும் பொய்சொல்லான் சிவந்தகண்ணான் சிறுகுழலா, னறிவுமிகவே பெருங்குணத்தா னடைந்தோர்க் கன்பனழகியனும், பொருள்சேர்மைந்தன்மனையாளைப் பொருளென்றெண்ணுன்புகழ் விளங்கும், நெறிசேர்கூந்தன்மடமானே வியாழக்காலிற்பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-19, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம்வெள்ளி-19, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, ஆக வயது 100.

இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஆரையுமறிந்துபேணு மரும்பொருட்கன்பனுகுஞ்
சீரியசெய்யவேண்டாஞ் சிலவதுசெய்வன்மிக்க
வாரியால்பொய்கள்சொல்லான் வழக்கறிந்துரைக்கவல்லன்
காரியங்கிசத்தில்வந்த கருத்துளகாளைதானே.

இதற்குக் காலசக்கரம்

மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-11, விருச்சிக செவ்வாய்-7, துலாம்வெள்ளி-19, கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுனபுதன்-9, ஆக வயது 89.

மூன்ருங்கால் கும்பசனியின் பலன்

ஊனமில்மனத்தனகு முற்றவர்பழியுமென்ருன்
மானமதுடையோனுகும் வழக்கறிந்துரைக்கவல்லன்
மேனியுமுருவநல்லன் மிக்கதோரறிவுமில்லை
கானகந்திரிந்துவாழுங் காரியங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-19, மிதுனபுதன்-6, ஆக வயது 83.

### நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

மாந்தளிர்போலுமேனி மனமிகுகல்விகற்ற
மேந்தியகுலத்திற்கெல்லா மிசைந்ததோர்குருவுமாவன்
காய்ந்தபினடக்கமாட்டான் கனங்குழலாற்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுவன் செய்யபொற்காலினுனே.

### இதற்குக் காலசக்க்ரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகர சனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, ஆக வயது-86.

### இனி மகாதிசை

சூரியன்-6, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-18, ராஜா-16, சனி-19, புதன்-17, கேது-7, வெள்ளி-10, ஆக வயது-120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் வெதுப்பால், 5-ல் சிலந்தியால், 7-ல் கண்ணோயால் 13-ல் கிரந்தியால், 16-ல் மிருகத்தால், 23-ல் நீரால், 27-ல் ஸ்திரீகளால் விருட்சத்தால், 28-ல் கண்ணோயால் ஆயுதத்தால், 35-ல் சத்துருவால், 44-ல் நெருப்பால், 55-ல் நீர்ப்பாட்டால், மூலத்தால், 85-ல் வலிப்பால் 87-ல் சிலேட்டுமத்தால் கண்டம்.

இவை கடந்தால் 100-வயது சென்று மாசி மாதம் அமர புட்சம் பிரதமை அனுஷநாளுதித்து 14-நாழிகையில் சிலேத்து மத்தால் வலிப்பு தோன்றி மரணம்.

### இவனுக்கு

சூரியன் உதயமாகில் கல்வியுடையவன்.

சந்திரன் உதயமாகில் பிரதானியாவான்.

செவ்வாய் உதயமாகில் நோயாளியாவன்.

புதன் உதயமாகில் வித்துவானுவன்.

வியாழம் உதயமாகில் புத்திரருடையவன்.

வெள்ளி உதயமாகில் வாகனமுடையவன்.

சனி உதயமாகில் மிடியன்.

இராகு உதயமாகில் கள்ளன்.

கேது உதயமாகில் துஷ்டன்.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் மீனத்தில் நாலுநாழிகை செல்லும்.

நாபிரஜ்ஜு

உத்திராட நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## திருவோண நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

கீ-க-கே-கோ-திருவோணம்

இந்நாளின் பலன்

ஓதியபொருளும்வல்ல னுயர்ந்திடும்புகழும்பூண்பான்
காதலால்குழலினர்க்குக் கனத்தொடுமுயலவல்லன்
சாதியுநெறியுமுள்ளோன் தத்துவமுணரவல்லன்
தீதொருநாளுஞ்செய்யான் திருவோணநாளினனே.

இந்நாளினுக்கு தெய்வம்-விஷ்ணு, பூதம்-வாயு, யோகினி-மயேஸ்வரி, ஜாதி-வைசியன், கோத்திரம்-வசிஷ்டன், யோனி-பெண்குரங்கு, பட்சி-மாடப்புரு, விருட்சம்-எருக்கு, சனிக்கிழமை-ஜென்மவாரம், கணம்-தெய்வம்.

இந்நாளில் வருஷம் பிறக்கில் அகமேறும்.

இந்நாளிற்கு 10-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இந்நாளில் வெதுப்பு தோன்றில் 7-நாளில் விடும். விடாதிருந்தால் வேதமந்திரம் சொல்லி நெய்யாலே ஓமம் பண்ணவும்.

பெண்திரளில் பிள்ளையுண்டாம்.

இந்நாளில் பிறந்தவன் தெய்வம், குரு, பிராமணாள் இவர்களுக்குப் பிரியமுடையவன், தனதான்ய முடையவன், முன்கோபி, நீராடப் பிரியன், அழகியன்.

திருவோண முதற்கால் மேஷச்செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன்னுடையனாகுஞ்
சிட்டரைச்சேர்ந்துவாழுஞ் சிறுகுறியாளனாகும்
பட்டயமணிந்ததோளன் படைக்கெலாந்தலைவனாகும்
மிட்டருக்கினியனாகி மெரியினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னி புதன்-9, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, ஆக வயது-100.

இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமருவுண்டென்றுஞ்
சீர்தருமுத்திபேணுஞ் சேய்தருங்கொடுங்கண்ணுள
ளுதரவுடையனகு மறிவுடனறிவுகற்குஞ்
சார்வதுமாதர்தம்மாற் றரும்புகர்க்காலினனே.

இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன்-9, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, ஆக வயது-83.

மூன்றுங்கால் மிதுனபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதராலருளுமுண்டாஞ்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோளிலேதிசையுமுண்டா
மந்தரப்பொய்கள்சொல்லா னரும்பொருணெருங்கிவாழும்
புந்தியிற்பெரியனகும் புதனினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, தனுசு வியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, ஆக வயது-85.

நாலாங்கால் சிங்காதித்தன் பலன்

நீளியசெய்யசால னிபுணனய்நேசஞ்செய்வன்
மாளிகைமலையில்வாழ்வன் மன்னரால்மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கன்னியாகு மனமதுசாரநில்லான்
காளிசேர்வடிவுதோன்றுங் கதிரவன்காலினனே.

இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்-16, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, ஆக வயது-86.

### இனி மகாதிசை

சந்திரன்-10, செவ்வாய்-7, இராகு-18, இராஜா-19, புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-6, ஆக வயது-120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் வெதுப்பால், 13-ல் மிருகத்தால், 25-ல் வயிற்று நோயால், 28-ல் ஸ்திரீகளால், 30-ல் எழுச்சியால், 39-ல் கண்ணேயால் ஆயுதத்தால், 47-ல் வயிற்றுநோயால், 55-ல் தந்தவியாதியால், 65-ல் சிலேத்துமத்தால் கண்டம்.

இவை கடந்தால் 87-வயது சென்று மார்கழி மாதம் அமரபட்சப் பிரதமை திங்கட்கிழமை யுதித்து 27-நாழிகைக்குமேல் சிலேட்டுமத்தால் வெதுப்புத்தோன்றி மரணம்.

### இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் ஆகமசாஸ்திரங் கற்று ஆசாரியாவன்.

சந்திரனுதயமாகில் அரசன்.

செவ்வாயுதயமாகில் நோயாளி.

புதனுதயமாகில் கல்வியுடையவன்.

வியாழமுதயமாகில் மந்திரி.

வெள்ளியுதயமாகில் வாகனமுடையவன்.

சனியுதயமாகில் கள்ளன்.

இராகு உதயமாகில் கோளன்.

கேது உதயமாகில் தரித்திரன்.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் மேஷத்தில் 3-நாழிகை செல்லும். கண்டரஜ்ஜு.

திருவோண நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## அவிட்ட நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

### கா-கீ-கூ-கே-அவிட்டம்

### இந்நாளின் பலன்

முன்னுரையுடையனாகு முகமலர்ந்தினிதுசொல்வன்
தன்னுடன்பிறந்தமாமன் ருயுடன்களித்துப்பேசும்
பொன்னுடன்மணியும்முத்தும் புகழ்பெறவணியவல்ல
னன்னமென்னடையினுளே யவிட்டநாடோன்றினுனே.

இந்நாளினுக்கு தெய்வம்-பரமேஸ்வரன், யோகினி - சாமுண்டி, ஜாதி - பிராமணன், கோத்திரம் - புலஸ்தியன், யோனி-பெண்சிங்கம், பட்சி-வண்டு, விருட்சம் வன்னி, கணம்-ராக்ஷதன், சனிக்கிழமை—ஜென்மவாரம், 10-நாழிகைக்குமேல் 4-நாழிகை சூனியம்.

இந்நாளில் பெண்திரளில் தனதான்ய புத்திர சம்பத்துண்டாம்.

வருஷம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரந்தோன்றில் 4-நாழிகையில் விடும், விடாதிருந்தால் விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் ஓமஞ் செய்து பாலும் சோறும் பலியிட்டு உடுத்திய வஸ்திரம், கம்பளி, ஆடு தானங் கொடுக்கவும்.

இந்நாளிற் பிறந்தவன் முன்கோபி, ஒன்றுக்கு மஞ்சான், கைகால் அழகியன், தெய்வபக்தி, குருபக்தியுடையவன், பசு, எருமை விருத்தியுள்ளவன், நீராடப்பிரியன், தருமங்கள் பலவுஞ் செய்வன், புறவடி உயர்ந்தவன், தன் சொல் மேன்மைப்பட வாழ்வன், கண்ணீர் மிகவு முடையவன்.

முதற்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுகு
மலைதருவல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்குகற்குங் கடிமதிக்காளையாகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, சிம்மாதித்தன்-5, கடகசந்திரன்-21, ஆக வயது 86.

இரண்டாங்கால் மிதுன பலன்

மேதையாலங்கசாளன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமாலுருவமாகு மனம்பொறுக்கரியவொண்ணுன்
ருதுசேர்குழலினுளே தன்பொருள்சாரநில்லான்
மீதுருவலக்கைவேலான் மிதுனனங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசு வியாழம்-10, மரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, ஆக வயது 83.

மூன்ருங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்ல சேயிழையாரைப்பேணு
மொள்ளியகண்ணில்வெள்ளா னுருபொருனிருபனுகும்
புள்ளியும்பலவுங்கற்கும் பாக்கியமுடையனுகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே.

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகர சனி 4, கும்பசனி-4, மீனவியாழம்-10, ஆக வயது 86.

நாலாங்கால் விருச்சிகசெவ்வாயின் பலன்

குருகியபுருவமெய்யன் குறலைசேர்குதலைவாயன்
மருகியமனத்தன்பெண்மேல் மனமதுசாரநில்லான்
முழுகியகொடுமைசெய்யு முதுகினிற்சுழியுமுண்டாஞ்
செறிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்திஞனே.

இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, ஆக வயது 100.

இனி மகாதிசை

செவ்வாய்-7, ராகு-18, ராஜா-16, சனி-19, புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-6, சந்திரன்-10, ஆக வயது 120.

இவன் பிறந்தவாண்டில் கண்டம்

5-ல் சுரத்தால், 7-ல் உதிரவியாதியால், 13-ல் உயரத்திலிருந்து விழுவதால், 16-ல் நாய்க்கடி விஷத்தால், 22-ல் ஸ்திரிகள் மருந்தால், 26-ல் அரையாப்பால், 32-ல் ராஜாவால் ஆயுதத்தால், 36-ல் கள்ளரால் சுரத்தால், 75-ல் சிரங்கால் தெய்வத்தால் பித்தத்தால் கண்டம்.

இவை கடந்தால் 96-வயது சென்று மாசிமாதம் பூர்வபட்சம் அஸ்த நட்சத்திரம் ஞாயிற்றுக்கிழமை விக்கல் இளைப்பு தோன்றி மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் சீமான்.

சந்திரன் உதயமாகில் மந்திரி.

செவ்வாய் உதயமாகில் தனபதி.
புதன் உதயமாகில் கல்வியுடையவன்.
வியாழம் உதயமாகில் தனவான்.
சனி உதயமாகில் மிடியன்.
இராகு உதயமாகில் கலகன்.
கேது உதயமாகில் மிடியன்.

இது நட்சத்திரம் உச்சமாகில் ரிஷபத்தில் அரை நாழிகை செல்லும்.

இந்நாளில் குழந்தை பிறந்தால் மாமனுக்கும் அண்ணனுக்கு மாகாது. இதற்குப் பரிகாரம் விஷ்ணுபூசை செய்யவும்.

சிரோரஜ்ஜு

அவிட்ட நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## சதைய நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

கோ-ஸ ஸி-ஸு-சதையம்

இந்நாளின் பலன்

வித்தையில்வலுமையாவன் விவேகமுமறிந்துபேச
எத்திசைதனிலுங்கீர்த்தி யிசையவேபெற்றுவாழ்வன்
புத்திரர்மனைவியோடு பொருந்தியேவாழவல்லன்
சத்தியமுடையனுகுஞ் சதையநாடோன்றினுனே.

கும்பராசியின் பலன்

சீர்மையுமுடை யனுகுஞ் சிறந்ததோர்கல்விகற்ப
னீர்மையுமுடையனுகு நெறியறிந்துரைக்கவல்லன்
வார்முலைதோகைமாதர் மணம்கொளுமனத்தனுகும்
கூர்மையுமுடையனுகுங் குலாவியகும்பந்தானே.

இந்நாளினுக்கு தெய்வம்-சந்திரன், பூதம்-ஆகாயம், ஜாதி-சூரியன், கோத்திரம்-அகஸ்தியன், யோகினி-துர்க்கை, யோனி-பெண்நாரை, பட்சி-அண்டங்காக்கை, விருட்சம்-கடம்பமரம், கணம்-ராட்சதன், ஜென்மவாரம்-சனிக்கிழமை.

இந்நாளிற் பெண்திரளில் பெண்பெறுவள் அல்லது மிடி படுவள்.

வருஷம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரந்தோன்றின் 9–நாழிகையில் விடும். விடாதிருந்தால் எள்ளு, சோறு, மாவு இவைகளைக் கலந்து பலியிட்டு வேதமந்திரஞ் செபித்து ஓமஞ்செய்து உடுத்திய வஸ்திரம் கம்பளி ஆடு இவை தானங் கொடுக்கவும்.

இந்நாளில் பிறந்தவன் அழகிய ஸ்திரீகண்ணன், முன்கோபி, சகல காரியங்களையும் விரும்பிச் செய்வன், ராஜபுருஷன், தெய்வசகாய முடையவன்.

### முதற்கால் மீனவியாழத்தின் பலன்

மாந்தளிர்போலுமேனி மனதொத்துக்கல்விகற்கு
மேந்தியகுலத்துக்கெல்லா மிசைந்ததோர்குருவுமாவன்
காய்ந்தபின்னடக்கமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுகுஞ் செய்யபொற்காலினுனே.

### இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-2, சிங்காதித்தன்-5, ஆக வயது-86.

### இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஊனமதுடையனுகு முற்றவர்பழியுமேருன்
மானமதுடையனுகும் வழக்கறிந்துரைக்கவல்லன்
மேனியுமுருவநல்லன் மிக்கதோரறிவுமில்லை
கானகந்திரிந்துவாழுங் காரியினங்சிசத்தினுனே.

### இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன்-9, துலாம்வெள்ளி-19, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, ஆக வயது-83.

### மூன்றுங்கால் கும்பசனியின் பலன்

ஆரையுமறிந்துபேணு மரும்பொருட்கன்பனுகுஞ்
சீரியசெய்யவேண்டாஞ் சிலவதுசெய்வன்மிக்க
மாரியாய்பொய்கள்சொல்வான் வழக்கறிந்துரைக்கவல்லன்
காரியங்கிசத்தில்வந்த கருத்துளகாளைதானே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-5, துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, ஆக வயது 81.

நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

சிறிதேயொன்றும் பொய்சொல்லான் சிவந்தகண்ணன் சிறுகுழலா, னறிவுமிகவேபெறுங்குணத்தா னடைந்தோர்க் கன்பனழகியனும், பொருள்சேர்மைந்தர்மனையாளைப் பொருளென்றெண்ணுன்புகழ் விளங்கும், வெரிசேர்கூந்தன்மடமானே வியாழக்காலிற் பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-19, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம்வெள்ளி-19, விருச்சிகசெவ்வாய்-7, ஆக வயது 106.

இனி மகாதிசை

ராகு-18, ராஜா-19, சனி-19, புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-6, சந்திரன்-10, செவ்வாய்-7, ஆக வயது 123.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் சுரத்தால், 5ல்-நாற்கால் மிருகத்தால், வைசூரியால், 9-ல் நீரால், 15-ல் உயரத்திலிருந்து விழுவதால், 19-ல் பிடரிவலிப்பால், 21-ல் அரையாப்பால், 23-ல் மருந்திடலால், 32-ல் கள்ளரால், 35-ல் மிருகத்தால், 41-ல் விஷத்தால், 57-ல் மூலவியாதியால், 61-ல் வயிற்றுக் கடுப்பால் கண்டம்.

இவை கடந்தால் 83-வயது சென்று வைகாசி மாதம் செவ்வாய்க்கிழமை அமரபட்சம் நவமி கார்த்திகை நாளுதித்து அஸ்தமித்து 8-நாழிகையில் விக்கலால் மரணம்.

இவை கடந்தால் 90-வயதுசென்று மாசி மாதம் திங்கட்கிழமை பூர்வபட்சம் பஞ்சமி பூராடமுதித்து 2-நாழிகையின்மேல் சோறுவிக்கலால் மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் வேளாண்மை பலிக்கும்.
சந்திரன் உதயமாகில் வியாபாரி.
செவ்வாய் உதயமாகில் அழகியன்.

புதன் உதயமாகில் கல்வியுடையவன்.

வியாழம் உதயமாகில் தனவான்.

வெள்ளி உதயமாகில் கள்ளன்.

இராகு உதயமாகில் அலங்காரமுடையவன்.

கேது உதயமாகில் உறக்கமுடையவன்.

இந்நாளில் அபிஷேகம் பண்ண, நமஸ்காரம்பண்ண, மனோகோல நாத்துவிட, விதைதெளிக்க, மருந்துண்ண நன்று.

பெண் திரளில் மிடி. கண்டரஜ்ஜு

சதைய நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## பூரட்டாதி நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

ஸே-ஸோ-தா-தீ-பூரட்டாதி

இந்நாளின் பலன்

மெய்யழகுடையனுதம் வெகுளிசொற்பேசான்மெய்யன்
கையதுகமலநோக்கும் கருத்துடன் கல்விகற்குந்
தையலைக்கூடிவாழ்வன் சபைதனிற்பேசவல்லன்
பொய்யுரையொன்றுஞ்சொல்லான் பூரட்டாதியில்வந்தானே.

இந்த நட்சத்திரம் கட்டிற்கால்போலிருக்கும்.

இந்நாளினுக்குயோனி—புருஷமிருகம், பட்சி உள்ளான், விருட்சம்-தென்னமரம், கணம்-மனுஷன், தெய்வம்-விகர்ப்பதனம், பூதம்-ஆகாயம், சாதி-பிராமணன், கோத்திரம்-புலஸ்தியன், யோகினி-இந்திராணி.

இந்நாளினுக்கு 16-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இவனுக்கு புறவடி உயர்ந்திருக்கும், குணமுடையவன், போசனப்பிரியன், விளக்கமுடையவன், கோபித்தவுடனே ஆறுவன், ஆதாரமுடையவன், அரசரால் கொண்டாட்டமுடையவன், நன்றிமறவான், உறக்கமுடையவன்.

முதற்கால் மேஷச்செவ்வாயின் பலன்

குருகியபுருஷமெய்யன் குரலைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன்பெண்மேல் மனமதுசாரநில்லான்
முழுகியகொடுமைசெய்யு முதுகினில்மருவுமுள்ளான்
செறிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசுத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, மீனவியாழம்-10, ஆக வயது-100.

இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்லன் சேயிழையாரைப்பேணு
மொள்ளியகண்ணில்வெள்ளா னுருபொருணிருபனுதம்
புள்ளியும்பலவுங்கற்கும் பாக்கியமுடையனாகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே.

இதற்குக் காலசக்கரம்

மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-19, கன்னிபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-9, ஆக வயது-88.

மூன்றுங்கால் மிதுனபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டாம்
மாதுளாலுருவமாகு மனம்பொறுக்கரியவொண்ணுன்
ரூட்டீசர்குழலினுளே றன்பொருள்சாரநில்லான்
மீதிருவலக்கைவேளான் மிதுனவங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி-16, மேஷசெவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன் 6, ஆக வயது-80.

நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுகு
மலைதருவல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்குகற்கும் கடிமதக்காளையாகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகர சனி-4, கும்பசனி-4, மீனவியாழன்-10, ஆக வயது-86.

இனி மகாதிசை

ராஜா-16, சனி-19, புதன்-17, சூரியன்-6, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-18, ஆக வயது-120.

### இவன் பிறந்தவாண்டில் கண்டம்

3-ல் வெதுப்பால், 5-ல் சலத்தால், 7-ல் சூரியால், 19-ல் விருட்சத்தால், 22-ல் ஸ்திரீகளால், ஆயுதத்தால், 38-ல் கள்ளரால், 34-ல் சூலேவாதத்தால், 42-ல் மிருகத்தால், 46-ல் வயிற்றுக் கடுப்பால், 50-ல் வாதத்தால், 55-ல் வயிற்றுக் கடுப்பால் கண்டம்.

இவை கடந்தால் 50-வயது சென்று மார்கழி மாதம் அமரபட்சம் பஞ்சமி வியாழக்கிழமை பூரட்டாதி அஸ்தமித்து 9-நாழிகையில் மரணம்.

### இவனுக்கு

சூரியன் உதயமாகில் மிடியன்.
சந்திரன் உதயமாகில் ராஜபுருஷன்.
செவ்வாய் உதயமாகில் கள்ளன், நோயாளி.
புதன் உதயமாகில் பலரும் விரும்ப வாழ்வன்.
வியாழம் உதயமாகில் தனவான்.
வெள்ளி உதயமாகில் வேளாண்மை பலிதமுடையன்.
சனி உதயமாகில் கள்ளன்.
ராகு உதயமாகில் கலகன்.
கேது உதயமாகில் மிடியன்.

இந்நாளில் பசுகொள்ள நெற்போர்கட்ட நன்று.

பெண்திரளில் தானியமுடையவள்.

மாதம் பிறக்கில் அகந்தாழும்.

வானத்தில் வில்லிடில் மழை பெய்யும்.

சுரந்தோன்றில் 2-நாளில் விடும். விடாதிருந்தால் வேதமந்திரஞ்சொல்லி நெய் பால் ஓமஞ்செய்து விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் பால்சாதம் பலியிடவும்.

இந்நாளில் பிறந்தவன் பால்குடித்து ஊர்வழிப் போகவும்.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் மீனத்தில் ஒண்ணரை நாழிகை செல்லும்.

நாபிரஜ்ஜு

பூரட்டாதி நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## உத்திரட்டாதி நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

துு-ச்ச-ஞா-த-உத்திரட்டாதி

இந்நாளின் பலன்

கற்றவன்சிறந்தமேனி கடுகியேநடக்கவல்லன்
பொற்புனேயுடையனுகும் புகழ்பெறவாழவல்லன்
வெற்றியிலினியனு மெய்யழகுடையனுது
முத்தமகுணத்தனுகு முத்திரட்டாதியானே.

மீனராசியின் பலன்

பொற்கொடிமடந்தைமாதர் பொருந்திடுந்தேசமெங்தும்
கற்றறிந்தோர்க்குநல்லன் கண்டவர்க்கினியனுகு
நெற்பயிர்தனக்குவல்ல னீருகந்தாடவல்லன்
வெற்றியுமுடையனுகும் விளங்கியமீனத்தானே.

இந்த நட்சத்திரம் கட்டிற்கால்போ லிருக்கும்.

இந்நாளினுக்கு யோனி-பசு, பட்சி-கோட்டான், விருட்சம்-வேம்பு, கணம்-மனுஷன், நாள்-பெண், தெய்வம்-ஆதித்தன், பூதம்-ஆகாயம், ஜாதி-பிராமணன், கோத்திரம்-புலஸ்தியன், யோகினி-சாமுண்டி.

இந்நாளிற் பிறந்தவன் நீதியுடையவன், புத்தியுடையான், தன் பிறப்புக்கு நல்லவன், வஞ்சனைசெய்யான், வல்லவன், வலதுபுறத்தில் மறுவுண்டு, பிரிதிவுக்கு நல்லவன், பலமுடையவன், உறவுக்கு நல்லவன், நன்றி மறவான், மார்பு அகன்றிருக்கும், முன்கோபி, கோபித்தபோதே ஆறுவான். அரசர்க்கு நல்லவன், தானியமுடையவன், நீராட வல்லவன், பொய்சொல்லான். செவி அகன்றிருக்கும், ஸ்திரீகண்ணன், மாதா பிதாவை இரட்சிப்பன், ஒருவருக்குந் தோருன், குருவுக்கு நல்லவன், பாக்கு வெற்றிலையிற் பிரியன்.

முதற்கால் சிங்காதித்தன் பலன்

நீளியசெய்யசால னிபுணனுய்நேசஞ்செய்வன்
மாளிகைமனையில்வாழ்வன் மன்னரால்மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கன்னியற்கு மனமதுசாரநில்லான்
காளிசேர்வடிவுதோன்றுங் கதிரவன்காலினனே.

இதற்குக் காலசக்கரம்

விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-9,

ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, ஆக வயது 100.

இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டாம்
மாதமாலுருவமாகு மனதுடன் கல்விகற்குந்
தாதுசேர்விழியார் தன்மேற் றன்பொருள்சார நில்லான்
மாதுருவலக்கைவேலான் மாலினங்கிசத்தினே.

இதற்குக் காலசக்கரம்

கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-19, மிதுனபுதன் 9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன் 9, ஆக வயது 85.

மூன்ருங்கால் துலாம்வெள்ளியின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமருவுண்டென்றுஞ்
சீர்தருமுத்திபேணுஞ் செய்தருங்கொடுங்கண்ணுள
ஞுதரவுடையனுகு மறிவுடனன்குகற்குஞ்
சார்வதுமாதர்தம்பாற் றரும்புகர்க்காலினுனே.

இதற்குக் காலசக்கரம்

துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-19, மிதுனபுதன்-6, ஆக வயது 83.

நாலாங்கால் விருச்சிக செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன்னுடையனுகுஞ்
சிட்டரைச்சேர்ந்துவாழுஞ் சிறுகுறியாளனுகும்
பட்டயமணிந்ததோளான் படைக்கெலாந்தலைவனுகு
மிட்டருக்கினியனுகு மெரியினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம்வெள்ளி 16, மேஷச்செவ்வாய் - 7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10. ஆக வயது 86.

இனி மகாதிசை

சனி-19, புதன்-17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன்-6, சந்திரன்-10, செவ்வாய்-7, ராகு-18, ராஜா-16, ஆக வயது 120.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் வெதுப்பால், 7-ல் வைசூரியால், 15-ல் மிருகத்தால், 22-ல் கள்ளரால், ஸ்திரீகளால், 25-ல் மருந்தீட்டால், 30-ல்

ராஜபடையால், 35-ல் நெருப்பால், 60-ல் வயிற்றுக்கடுப்பால் கண்டம்.

இவை கடந்தால் 86-வயது சென்று ஆடிமாதம் சனிக்கிழமை அமரபட்சம் அஸ்தமித்து சோதிநாளுதித்து சூரியனஸ்தமித்து 9-நாழிகையில் மூச்சுத்தப்பி மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் உள்வெதுப்புடையவன்.
சந்திரன் உதயமாகில் ராஜகிருபையுடையவன்.
செவ்வாய் உதயமாகில் கோளன்.
புதன் உதயமாகில் வித்துவான்.
வியாழம் உதயமாகில் பண்டிதன்.
வெள்ளி உதயமாகில் சுகனெறியன்.
சனி உதயமாகில் குருடன், கள்ளன்.
இராகு உதயமாகில் குருடன் அல்லது முடவன்.
கேது உதயமாகில் விஷகாரியன்.

இந்நாளில் பூஞ்சோலைவைக்க விவாகம்பண்ண சீமந்தஞ் செய்ய அன்னப்பிராசனம் பண்ண கல்வி கற்க மனைகோல குடிபுக பொன்பூண கோடியுடுக்க ஆடுகொள்ள யாத்திரை செய்ய நன்று.

பெண்திரளில் பொருளுடையவன்.

மாதம்பிறக்கில் அகமேறும்.

சுரந்தோன்றில் 20-நாளில் விடும். விடாதிருந்தால் வேத மந்திரஞ் சொல்லி நெய்யாலே ஓமஞ்செய்து விருட்சத்தடியில் ரத்தமுஞ் சோறும் பலியிடவும்.

இந்நாளில் பிறந்தவன் குயிலிறைச்சி தின்று ஊர்வழிப் போகவும். இந்த நட்சத்திரம் உச்சமானல் மிதுனத்தில் 8-நாழிகை செல்லும்.

சங்கரஜ்ஜு

உத்திரட்டாதி நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

## ரேவதி நட்சத்திரத்தின் அதிதேவதை முதலியவைகள்

தே-தோ-சா-சீ-ரேவதி

இந்நாளின் பலன்

குலவுருங்கண்ணனுகுங் குலவியசந்தனுகும்
பயன்களையறியவல்லன் பாவமும்பழியும்பேணு
நயமிகவுடையனுகு நானிலத்தோர்க்குநல்ல
னியலுடன்வாழவல்ல னிரேவதிநாளினுனே.

இந்த நட்சத்திரம் தோணிபோலிருக்கும்.

இந்நாளினுக்கு யோனி-யானை, பட்சி-வல்லுறு, விருட்சம்-இலுப்பைமரம், நாள்-பெண், தெய்வம்-பிரமன், பூதம்-ஆகாசம், ஜாதி-வைணவன், கணம்-தெய்வம்.

பங்குனிமாதம் சூனியம் 30-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

இந்நாளில் பிறந்தவன் இல்லையென்று சொல்வான், புத்தியுடையவன், பாக்கு வெற்றிலையிற் பிரியன், தெய்வபக்தியுடையவன், புறத்தியார் சொற்கேளான், ஸ்திரீகண்ணன், ஒழுக்கமுடையவன், தோளில் கழுத்தில் மார்பில் மறுவுடையன், பசித்திருக்கவொண்ணுன்.

முதற்கால் தனுசு வியாழத்தின் பலன்

சிறிதேயொன்றும் பொய்சொலான் சிவந்தகண்ணன் சிறுகுழலா, னறிவுமிகவேபெருங்குணத்தா னடைந்தோர்க்கன்பனழகியனும், பொருள்சேர் மைந்தன்மனையாளைப் பொருளென்றெண்ணுன் புகழ்விளங்கும், வெறிசேர்கூந்தன் மடமானே வியாழக்காலிற் பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-19, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-15, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, ஆக வயது-100.

இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஆரையுமறிந்துபேணு மரும்பொருட்கன்பனுகுஞ்
சீரியசெய்யவேண்டாம் சிலவதுசெய்வன்மிக்க
வாரியாய்பொய்கள்சொல்லான் வழக்கறிந்துரைக்கவல்லன்
காரியங்கிசத்தில்வந்த கருத்துள காளைதானே.

இதற்குக் காலசக்கரம்

மகரசனி–4, கும்பசனி–4, மீனவியாழம்-10, விருச்சிக செவ்வாய்-7, துலாம்வெள்ளி-16, கன்னிபுதன்-9, கடகசந்திரன்–21, சிங்காதித்தன்–5, மிதுனபுதன்-9, ஆக வயது 85.

மூன்ருங்கால் கும்பசனியின் பலன்

ஊனமில்மனத்தனுகு முற்றவர்பழியுமேருன்
மானமதுடையோனுகும் வழக்கறிந்துரைக்கவல்லன்
மேனியுமுருவுநல்லன் மிக்கதோரறிவுமில்லை
கானகந்திரிந்துவாழுங் காரியங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி-19, மேஷசெவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம்-10, மேஷச்செவ்வாய்-6, ரிஷபவெள்ளி-19, மிதுனபுதன்–9. ஆக வயது 88.

நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

மாந்தளிர்போலுமேனி மனமொத்துகல்விகற்கு
மேந்தியகுலத்துக்கெல்லா மிசைந்ததோர்குருவுமாவான்
காய்ந்தபினடக்கமாட்டான் கனங்குழலாற்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுவன் செய்யபொற்காலினுனே.

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன்–21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, ஆக வயது 86.

இனி மகாதிசை

புதன்-17, கேது-7, சுக்கிரன்–20, சூரியன்-6, சந்திரன்-10 செவ்வாய்-7, ராகு-18, ராஜா-19, ஆக வயது 104.

இவன் பிறந்தவாண்டில் கண்டம்

5–ல் வைசூரியால், 7-ல் உயரத்திலிருந்து விழுவதால், மிருகத்தால், 12-ல் விஷத்தால், 20-ல் ஸ்திரீகளால், 25–ல் மருந்தீட்டால், 42–ல் கள்ளரால், 48-ல் வெதுப்பால், 51-ல் வயிற்றுக்கடுப்பால், 52–ல் மூலவியாதியால், 55-ல் வயிற்றுக் கடுப்பால், 58–ல் முழங்கால் வாதத்தால் கண்டம்.

இவை கடந்தால் 89-வயது சென்று பங்குனிமாதம் பூர்வ பட்சம் நவமி செவ்வாய்க்கிழமை உத்திராடமுதித்து நீர்ப்பாட்டால் மரணம்.

இவை கடந்தால் 98-வயது சென்று ஞாயிற்றுக்கிழமை துவாதசி ரேவதி அஸ்தமித்து 2-நாழிகைக்குள் பித்தங் கதித்து மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் முன்கோபி.

சந்திரன் உதயமாகில் சீமான்.

செவ்வாய் உதயமாகில் வீரன்.

புதன் உதயமாகில் கனவான், வித்துவானுவன்.

வியாழம் உதயமாகில் தன் கருமமிருக்கப் பிறர் கருமஞ் செய்வன்.

வெள்ளி உதயமாகில் மிகவும் ஊனமுடையவன்.

சனி உதயமாகில் குருடன், மிடியன்.

இராகு உதயமாகில் நச்சுவாயன்.

கேது உதயமாகில் கள்ளன்.

இந்நாளில் அன்னப்பிராசனம் பண்ண, மணகோல குடிபுக விவாகஞ்செய்ய வித்தியாரம்பம் பண்ண பொன்பூண கோடியுடுக்க நன்று.

பெண் திரளில் பிணியுடையவள்.

சுரந்தோன்றில் 10-நாளில் விடும். விடாதிருந்தால் வேத மந்திரஞ் சொல்லி நெய்யாலே ஓமஞ்செய்து விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் செந்நெல் பலியிடவும்.

பால் குடித்து ஊர்வழிப் போகவும்.

இது உச்சமானுல் மிதுனத்தில் 5¼-நாழிகை செல்லும்.

பாதரஜ்ஜு

ரேவதி நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

மரணகண்டி என்னும் ஜோதிட சாஸ்திரம்

முற்றிற்று.

---

திருமகள் அச்சகம், சென்னை—1. 1978.

